Koviloor Digital Library

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகள்

அருளிச்செய்த

# ஆத்மபோத டீகா வசனம்.

இஃது

சமிவனக்ஷேத்திரமென்னுங்கோயிலூர்

ஸ்ரீ முத்துராமலிங்கசுவாமிகளின்

ஆதீனத்திற்குரிய

ஸ்ரீ சிதம்பரசுவாமிகள்

மாணாக்கர்களிலொருவராகிய

அ-இராமசுவாமியவர்களால்,

கோயிலூர் ஏட்டுப்பிரதிமுதலிய

பலபிரதிகளைக்கொண்டு பரிசோதித்து,

இராயபுரம்-நாக-பெரி-முத்தையாசெட்டியார்

வேண்டுகோளின்படி

சென்னை:

வே. நா. ஜூபிலி அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

சர்வதாரிஸு சித்திரைமீ.

இதன்விலை அணா ரு.

*Registered Copy Right.*

1888.

KOVILOOR ANDAVAR LIBRARY

ACC. NO. 45704

Koviloor Digital Library

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ குருவே நம:

# ஆத்மபோத டீகா வசனம்.

## குருவணக்கம்.

சுருதி ஸ்மிருதி புராணாலயமாயுங் கருணாலயமாயும் பகவான்யுமிருக்கின்ற ஸ்ரீசங்கராசாரியருடைய பாதங்களுக்கு நமஸ்காரம். (க)

அந்த ஸ்ரீசங்கராசாரியருடைய சிஷாளான பத்மபாதர், அஸ்தாமலகர், தோடகர், வார்த்திகர், ஆகிய இவர்களையு மென்னுடைய குருவையு மனதிலே தியானிக்கின்றேன். (உ)

## நூல்.

ஆத்மபோத சுலோகத்துக்கு வியாக்கியானப்பிரகாரம் டீகை.

(அவதாரிகை.) முதற்சுலோகத்திலே சகலலோக பூச்சியரான ஸ்ரீ ஆசாரிய சுவாமிகள் சகலவேதசாஸ்திர புராணவிதிகாச சம்பன்னாளாயும், சமதமாதி சகிதாளாயுமிருக்கிற வுத்தமாதிகாரிகளுக்குச் சூத்திரபாஷிய முபநிடதபாஷியங் கீதாபாஷியங்களென்கிற வேதாந்தப் பிரஸ்தானத் திரயங்களை நிர்

Koviloor Digital Library



மாணம்பண்ணிப் பிற்பாடிந்த மூன்றுபாஷியங்களையு மவைகளைச்சேர்ந்த வியாக்கியானே பன்னியாச விஸ்தாரங்களையும் பார்த்துத் தார்ப்பரியத்தை நிச்சயஞ்செய்கின்ற சாமர்த்தியமில்லாதபேர்களாயும், மஹாமுமூக்ஷுக்களாயுமிருக்கிற மந்தவதிகாரிகளை இரக்ஷிக்கிற நிமித்தஞ் சர்வ வேதாந்த சித்தாந்த சங்கிரகரூபமாயு மாத்மபோதமென்கிற பெயரை யுடைத்தானதாயுமிருக்கிற பிரகரணத்தை வெளியாய்ப் பிரகாசிப்பிக்கிறநிமித்தம் பிரதிக்ஞைபண்ணுகிறார்.

[சுலோகார்த்தம்.] கிரிச்சிரஞ் சாந்திராயண நித்திய நைமித்திகாதி யநுட்டான ரூபங்களாயிருக்கிற தபசுகளினாலே ராகாதியந்தக்கரண தோஷங்களாகிற பாவநசித்தவர்களாயு மிருதயங்கலங்காதபேர்களாயு மிகபரசுகவிச்சை நீங்கினவர்களாயு மோக்ஷவிச்சையை யுடையவர்களாயும் வேதாந்த சாஸ்திரோத்தமான சாதன சதுஷ்டய சம்பன்னர்களாயு மிருக்கிற சற்புருடாளுக்கு ஆத்மாவைத் தெரிவிக்கின்ற விந்த வாத்மபோதப் பிரகரணமானது பிரதிபாதிக்கப்படுகின்றது.

(விசேடம்.) தபசுகளினாலே பாவநசிக்குமென்கிறதிற் பிரமாணமென்னவென்றால்? நித்திய நைமித்திக கருமங்களாலே பாவக்ஷயமென்று சொல்லுகிற ஸ்மிருதிவசனமே பிரமாணம். மோக்ஷவிச்சையாவது? அனேக ஜனனமரணப் பிரவாக பரம்பரைக் கேதுவாயிருக்கிற அஞ்ஞானவிருதயக் கிரந்தியைப் பேதிக்கின்றதிலே யாதொரு தீவிரப் பிரயத்தினமுண்டோ வதுவே; மோக்ஷவிச்சை. (க)

(அ-கை.) தபோயோக மந்திராதிகளாகிற வனேக சாதனங்களிருக்க மோக்ஷத்தைக்குறித்துப் போதத்தைத்தானே பிரமாணமாகச் சொல்லுவானேனென் றாட்சேபித்துக்கொண்டு சமாதானம் பண்ணுகிறார்.

Koviloor Digital Library



[சு-ம்.] லோகத்திலே சமையல்பண்ணுகிறதற்குக் காட்ட ஜலபாண்டாதிகளான இதர சாதனங்க ளனேகமிருந்தாலு மக்கினி யெப்படி முக்கியசாதனமோ; அப்படிப்போலே ஞானமானது தபோமந்திர யோகாதிகளாகிற சாதனங்களைகாட்டிலு மோக்ஷத்துக்கு முக்கியசாதனம்.

(இதனது தாற்பரியம்.) தபோயோக மந்திராதி சாதனந்தரங்களெல்லாம் பரம்பராக்கிரமத்தினாலே ஞானத்தையுண்டு பண்ணி வைத்துக்கொண்டு மோக்ஷத்தைக்கொடுக்கும். ஞானமோவென்றால்? தானுற்பத்தியானவுடனே ஒரு சாதனாந்தரங்களையு மபேக்ஷியாம லஞ்ஞானத்தை வேரோடே நசிப்பித்திந்த முமுக்ஷுவை சுவாராச்சியபார சிம்மாசனத்திலேவைத்துப் பட்டாபிடேகம் பண்ணிவைக்கும். ஆகையினாலே யன்னிய சாதனங்களைக்காட்டிலும்; ஞானத்துக்கு பிராதானியஞ் சொல்லப்பட்டது. (உ)

(அ-கை.) கருமங்களுக்கு விசித்திர கதித்துவ மிருக்கிறபடியாலேதானாலு மொருவிசேட கருமமான தஞ்ஞானத்தை நிவிர்த்திசெய்யு மப்படியிருக்க வாத்மஞானத்தினாலே யாகவேண்டிய தென்னவென்கின்ற சங்கைக்கு கருமத்துக்கு மஞ்ஞானத்துக்கும் விரோதமில்லாதபடியினா லப்படி நிவிர்த்திசெய்யமாட்டாதென்று சமாதானஞ் செய்கிறார்.

[சு-ம்.] யாகஞ்செய்தல்முதலாகிய கருமமான தவித்தைக்கு விரோதமாகாதபடியினாலே வித்தையே யவித்தையைத் தீபாதிப் பிரகாசங்க ளிருட்கூட்டத்தை யெப்படிக் கெடுக்குமோ; அப்படிக் கெடுக்கும்.

(இ-ம்.) சேற்றைச் சேற்றாற் கழுவக்கூடாததுபோல கருமமான தவித்தைக்கு விரோதியாகாததா லவித்தையை நசிப்பிக்கிறதற்குச் சாமர்த்தியத்தை யுடைத்தானதன்று. வித்தை

Koviloor Digital Library



யோவென்றால்? தான் சொப்பிரகாச சொரூபமானதால் தேச வானது திமிரசங்கத்தைக் கெடுத்தல்போல அவித்தையை நசிப்பிக்கிறதிலே சாமர்த்தியமுடையது. (ங)

(அ-கை.) ஆத்மாவானவர் சரீரங்கடோறும் பரிச்சின்னராகவே யநுபவிக்கப்படுகிறா ரப்படிப் பரிச்சின்னராக யிருக்கிற வாத்மாவுக்குக் கைவல்லியமாகிய வேகத்துவ மெப்படிக் கூடுமென்று சங்கித்துக்கொண்டு சமாதானஞ் சொல்லுகிறார்.

[சு-ம்.] பிரத்திகாத்மாவானவர் மூலாக்ஞானத்தினாலே பரிச்சின்னர்போலே விளங்குகிறார். அந்த வஞ்ஞான நாசமானவுட னத்துவிதியராகத் தானாகவே மேகாவரண நாசமானவுடன் சூரியன்போல விளங்குகிறார்.

(இ-ம்.) பரிபூரணராயும், அத்துவிதியராயுமிருக்கிற வாத்மாவுக்கு மாயாபரிகற்பித வுத்தம மத்திம வதம சரீரத்திரய சென்னிய பரிச்சின்னத்துவமான தவிவேகத்தினாலுண்டானதேயல்லாமற் பாரமார்த்த விசாரதிருஷ்டியிலேயில்லை. ஆகையாற் றத்துவ விவேகத்தினா லவிவேகத்துக்கு ஆனிவருகிற போது மேகாவரணம் போனவுடன் சூரியரெப்படி விளங்குகிறாரோ; அப்படியே யாத்மாவும் விளங்குகிறார். (ச)

(அ-கை.) அகண்டாகார விர்த்திக்ஞானத்தினாலே ஞாதுருக் ஞான நேயங்களென்கிற திரிபுடிரூபமான தொய்தசித்தியிருக்கிறபடியினா லாத்மாவுக் கத்துவித சித்தியானது கூடாதென்று சங்கித்துக்கொண்டதற்குச் சமாதானஞ் சொல்லுகிறார்.

[சு-ம்.] அகண்டாகார விர்த்திக்ஞானமான தஞ்ஞானகாரியமான வகமாதி வாசனையோடுங் கர்த்துருத்துவ போக்துருத்துவாதி யபிமானத்தினாலே கலங்கிப்போனவனா யிருக்கிற

Koviloor Digital Library



ஜீவாத்மாவை ஞானநிஷ்டையாயிருக்கிற இடாப்பியாசத்தினு லே சத்துவ ரசோ தமோமலத்தை யுடைத்தாகாதவனுகப் பண்ணிப்போட்டுத் தானும் கதகரேணுவானது கலங்கினஜல த்தைத் தெளியவைத்துத் தானும் கெடுதல்போ னசிக்கும்.

(இ-ம்.) அஞ்ஞான காரியங்களான வகமாதி வாசனைகளி னுலே கலங்கியிருக்கிற ஜீவனை ஞானமானது மிகுகாலப் பழக் கத்தினுலே முன்னே யஞ்ஞானத்துக்கு நாசத்தை யுண்டு பண்ணி வைத்துக்கொண் டந்தவழியா யந்தவஞ்ஞான காரிய மான வந்தக்கரணுதிக ளெல்லாவற்றையு நாசம்பண்ணிப்போ ட்டுக் கலங்கினஜலத்தைத் தெளியவைத்த கதகரேணுவைப் போலே தானும்; நசித்துப்போய்விடும். விர்த்தியான தஞ்ஞான காரியமானபடியினுலேயும் அதிற்பிரதிவிம்பித்த சைதன்னிய மாத்மாபாச மானபடியினுலேயு மந்தச்சைதன்னிய மாத்மாவி னிடத்திலேதானே வைக்கத்தை யடையும். (ரு)

(அ-கை.) பிரத்தியக்ஷ பிரமாணமூலமா யநுபவிக்கப்படு கிற சமுசாரத்துக் கத்தியந்தாசத்தியத்துவமானது பிரத்தியக்ஷ விரோதமானபடியினு லஃதெப்படிக்கூடுமென்று சங்கித்துக் கொண்டு சமாதானஞ் சொல்லுகிருர்.

[சு-ம்.] ராகத்துவேஷாதிவிர்த்திகளினுலே நெருங்கியிருக் கிற வகங்காராதிப் பிரபஞ்சமானது சொப்பனப் பிரபஞ்சத்து க்குச் சமானம். மேற்சொல்லிய சமுசாரப் பிரபஞ்சமானது வஞ்ஞானதிசையிலே சத்தியமாய் விளங்கும். பிரபோததி சையிலே யசத்தியமாய்ப் போய்விடும்.

(இ-ம்.) ராகத்துவேஷாதிகளினு னெருங்கியிருக்கிற சமு சாரமானது மித்தையா யிருந்தாலும்; தனக்குக் காரணமான வஞ்ஞானமுள்ளளவும் சத்தியம்போல விளங்கும். பிற்பாடு

Koviloor Digital Library



மஹாவாக்கியார்த்த சிரவண மூலமாயுண்டாகிற பிரமசாக்ஷா த்கார நிசையிலே நித்திரைதெளிந்தவுடன் சொப்பனப் பிர பஞ்சமானதுபோல வசத்தியமாய்ப் போகும். (சு)

(அ-தை.) முன்சொன்ன வர்த்தத்தைப் பின்னு மொருதி ருஷ்டாந்தத்தினுற் றிடப்படுத்துகிருர்.

[சு-ம்.] அவ்வியத்தாதி தூலபரியந்தமான வனுத்மாக்க ளா ரோபிக்கிறதற் கிடங்கொடுக்கிறதாயு நாசமில்லாததாயுமிருக் கிற பரப்பிரமமான தெதுவரைக்கு மறியப்படவில்லையோ; அதுவரைக்கும் பிரபஞ்சமானது; சுத்தியைத் திரிகோணமா யும், பின்புறம் நீலநிறமுடையதாகவு மெதுவரைக்கு மறியப் படவில்லையோ; அதுவரைக்கும் ரசிதம்விளங்குகிறதுபோலச் சத்தியமாகவிளங்கும். (எ)

(அ-தை.) சகலஜகத்தும் பிரமத்தினிடத்தி லுற்பத்தி திதி நாசங்களை யடைகிறதென்று சொல்லுகிருர்.

[சு-ம்.] சகலநாம ரூபகற்பனைக்கு மதிட்டானமாயு மபின் னநிமித்தோபாதான காரணராயுமிருக்கிற மாயோபாதிகரிடத் திலே பிரபஞ்சங்களானவை வாரியினிடத்திலே குமிழிகள் போல வுற்பத்தி திதிநாசங்களை யடைகின்றன. ஆகையா லெல்லாம் நாசத்தை யுடையவைகள்.

(இ-ம்.) சர்வாதிட்டானமாயுஞ் சச்சிதானந்தாத்துவயமா யுமிருக்கிற பிரமமான தெதுவரைக்குந் தானுயநுபவிக்கப்பட வில்லையோ; அதுவரைக்கும் ஜகத்தாகாரமாய்ப் பரிணமித்து க்கொண்டிருக்கிற சமுசாரமானது பிராந்தியினுலே சத்தியம் போலே பிரகாசிக்கும். (அ)

(அ-தை.) சகலிரிசியப் பிரபஞ்சமும் பிரமத்தினிடத்தி லேதானே மாயாகற்பிதமென்று பிரதிபாதிக்கிருர்.

Koviloor Digital Library



[சு-ம்.] சச்சிதானந்த சொரூபியாயு மணிகளிற் சூத்திரம் போற் சர்வசரீரத்திலு மநுசூதராயு நான்கபாவமற்றவராயு மாகாசம்போலே சர்வத்திலும் வியாபித்த விஷ்ணுவாயுமிருக்கிற பிரமத்தினிடத்திலே யொன்றுக்கொன்று வெகு பேதமுள்ளதுகளாயு மனேகங்களாயுமிருக்கின்ற நாமரூபங்களானதுகள் சுவர்ணத்திலே கடக மகுடாதிகள்போல வாரோபிதங்கள்.

(இ-ம்.) சத்தியக்ஞானனந் தாத்மகராயுஞ் சர்வாநுசூதராயு நித்தியராயும் வியாபகராயுமிருக்கிற பிரமத்தினிடத்திலே வனேகபிரகாரமாயிருக்கிற தேவ திரியக்கு நர தாவர சங்கம சொரூபமான சகல நாம ரூபாத் மகத் தோற்றங்களுஞ் சுவர்ணத்திலே கடகாதிகள்போற் கற்பிதங்களேயல்லாம லணுமாத்திரமானாலும் பிரமத்தைவிட வேறில்லை. (சு)

(அ-கை.) மேற்சொல்லிய வர்த்தத்தையே யாகாச திருஷ்டாந்தத்தினாற் றிடப்படுத்துகிறார்.

[சு-ம்.] மனசுமுதலிய சர்வேந்திரியப் பிரவர்த்தகராயுஞ் சர்வ வியாபகராயுமிருக்கிற பரமாத்மாவானவ ரனேகங்களாயிருக்கிற லிங்கசரீரங்களை யடைந்தவராய்க் கொண்டு பாரமார்த்தமாய்த் தனக்குப் பேதமில்லாமலிருந்தாலும்; அந்தலிங்க சரீரோபாதிகளுடைய பேதத்தினாலே யனேகர்போலே விளங்குகிறார். அந்த லிங்கதேகங்களுக்கு நாசம்வரிற் கடாதிவுபாதிநீங்கிய வாகாசம்போல; அத்துவிதியராக விளங்குவர்.

(இ-ம்.) ரிஷிகேசராயும் விபுவாயுமிருக்கிற பரமாத்மாவானவர் கடமடவுபாதிகளிலே யாகாசமானதுபோலத் தன்னஞ்ஞான பரிகற்பிதங்களாயிருக்கிற வனேகவுபாதிகளிலே பிரதிவிம்பித் தனேகர்போலத் தோனுகிறார்.

Koviloor Digital Library



பிரமாத்ம வைக்கியக் ஞானத்தினாலே மாயாகற்பிதமான வத்த லிங்கசரீரோபாதிகளுக்கு நாசம்வருகிறபோ தேகராக வே விளங்குகிறார். (ம)

(அ-கை.) சர்வசரீரங்களிலேயு மந்தந்தச்சாதி தருமா வவ ஸ்தாதி யபிமானியாயிருக்கிற வாத்மாவுக்கு நித்தியமுக் தத்து வமெப்படிக் கூடுமென்று சங்கித்துக்கொண்டு சமாதானஞ் சொல்லுகிறார்.

[சு-ம்.] பிராமணத் துவாதிசாதிகள் ராமகிருஷ்ணாதி நாமங் கள் பிரமசரியாதி யாச்சிரமங்க ளானவிவைக ளனுவாயிருக் கிற தூலசூக்ஷும சரீரோபாதிகளுடைய வசத்தினாலே யாத் மாவினிடத்திலே ஜலத்தில் ரசவர்ணாதிபேதம்போலக் கற்பித ங்கள்.

(இ-ம்.) சுபாவமதுரமா யிருக்கிற ஜலமானது கசத்தல், தித்தித்தலாதி, திரவியங்களுடனே சேர்ந்து அந்தந்தக் குண சொரூபமாக வெப்படியிருக்கிறதோ; அப்படிப்போல வாத்மா வானவர் முன்சொல்லப்பட்ட நானுவுபாதிகளுடனேசேர்ந் தந்தந்தச்சாதிநா மாச்சிரமசொரூபியா யிருக்கிறார். (மக)

(அ-கை.) ஆத்மாவுக் கவித்தையாகற்பித வுபாதித்திரயத் திலே முந்தினவுபாதியைக் காண்பிக்கிறார்.

[சு-ம்.] பஞ்சீகரணம் பண்ணப்பட்டிருக்கிற தூலப்பிருதி வியாதி பஞ்சபூதங்களினின்று முண்டானதாயுங் கருமத்தினு னிர்மிக்கப்பட்டதாயுமிருக்கிற தூலசரீரமான தனுகூலப்பிர திகூல விர்த்திரூபமான சுகதுக்காநுபவத்திற் கிடமென்று சொல்லப்படுகிறது.

(வி-ம்.) பஞ்சீகரணமாவது அபஞ்சீகிருதபூதங்க ளொன் றொன்றை இரண்டாகப் பத்தாக்கியதில் ஒருபாதிநிற்க மற்

Koviloor Digital Library



ருபாதி யைந்தில் ஒவ்வொன்றை நன்னாலாக்கி இதாமான ஐந்துபூதங்களிலே தன் னம்சத்தைவிட்டு மற்றநான்குபூதங்களினு மந்த நான் கம்சத்தையுஞ் சேர்க்கிறபோ தொவ்வொன்றுக் கைந்துகுணமுண்டாம்.

(இ-ம்.) பஞ்சீகிருத பஞ்சமஹாபூத சென்னியமாயுங் கருமத்தால் நிர்மிக்கப்பட்டதாயுமிருக்கிற தூலசரீரமானது போக்தாவாயிருக்கிற புருடனுக்குப் போஜனசாலைபோல வாத்மா சுகதுக்கத்தை யநுபவிக்கிறதற்கு வசிக்கிறவிடம். (௰௨)

(அ-கை.) இரண்டாவதா யிருக்கிற சூக்ஷுமசரீரோபாதியைக் காண்பிக்கிறார்.

[சூ-ம்.] மஹாப் பிராணனுடைய விர்த்தி பேதங்களான பிராணபான வியானோதான சமானனென்ன, சங்கற்ப விகற்பாத்மகமான மனசென்ன, நிச்சயாத்மகமான புத்தியென்ன, சுரோத்திரந் தொக்கு சக்ஷு சிங்ஙுவை யாக்கிராணமென்கிற ஞானேந்திரியங்களென்ன, வாக்கு பாணி பாத பாயுரு வுபஸ்தங்களென்கிற கருமேந்திரியங்களென்ன, விவைகளோடே கூடினதாயும் அபஞ்சீகிருத பூதங்களிலேநின்று முண்டானதாயுமிருக்கிற சூக்ஷுமசரீரமானது முன்சொன்ன சுகதுக்க போகத்திற்குச் சாதனம்.

(இ-ம்.) பதினே ழிந்திரியசகிதமாயுஞ் சூக்ஷுமபூதசென்னியமாயுமிருக்கிற லிங்க சரீரமானது ஜீவனுக்குச் சுகதுக்க போகத்திற்குக் காரணம். (௰௩)

(அ-கை.) மூன்றாவதாயிருக்கிற காரணசரீரோபாதியைக் காண்பிக்கிறார்.

[சூ-ம்.] அநிர்வாச்சியமாயு மாதியையுடைத்தான தாகாததாயுமிருக்கிற வவித்தையானது ஸ்தூலசூக்ஷுமப் பிரபஞ்ச

Koviloor Digital Library



காரணமாயிருக்கிற வுபாதியென்று சொல்லப்படும். இப்ப டித் திரிவித வுபாதியையுஞ் சொல்லிக்கொண்டு வந்ததிற்குப் பிரயோஜன மேதென்றால்? பிரத்தியகாத்மாவைத் தூலசூக்ஷம காரணங்களாகிற வுபாதித்திரயத்தைக்காட்டிலு மன் னியராகவே விவேகியானவ னிச்சயமாயறிவன்; இதுவே பிர யோஜனம்.

(வி-ம்.) அவித்தைக் கநிர்வசநீயத்துவமெப்படிச் சொல்லு கிறதென்றால்? சொல்லுகிறோம். சத்தென்றுசொல்லுவமெ ன்றால்? பாரமார்த்திக திசையிலே யில்லாமற் போகிறபடியா லப்படிச் சொல்லக்கூடாது. அசத்தென்று சொல்லுவமென் றால்? வியவகாரதிசையி லனேகஜனனமரணப் பிரவாகத்துக் கிடங்கொடுத்துக்கொண் டிருக்கிறபடியா லதுவுங்கூடாது. சதசத்தென்று சொல்லுவோமென்றால்? பிரகாசாந்தரங்களு க்கு விரோதம்போல வொன்றுக்கொன்று விரோதமானதா லதுவுங்கூடாது. இவைபோலப் பின்னம், அபின்னம், பின் னாபின்னமென்றும், சங்கம், அசங்கம், சங்காசங்கமென்றும், அவித்தையை யொருவிதத்திலேயும், வசனிக்கக்கூடாதபடி யால் அநிர்வசநீயமென்றே சொல்லப்படும்.

(இ-ம்.) அனாதியா யநிர்வசநீயமாயிருக்கிற வவித்தையே காரணோபாதி இந்தமூன் றுபாதிகளுக்குஞ் சாக்ஷியானவறி வே நானென்றறியவேண்டும். (௰௪)

(அ-கை.) அன்னமயாதிகளாயிருக்கிற கோசங்களில் வியா பித் தந்தந்தக் கோசாபிமானியா யிருக்கிற வாத்மாவுக்கு நித்தி யமுக் தத்துவமெப்படிக் கூடுமென்று சங்கித்துக்கொண்டு சமாதானஞ் சொல்லுகிறார்.

[சு-ம்.] நிர்மலராயிருக்கிற பிரத்தியகாத்மா வானவர் அன் னமய பிராணமய மனோமய விஞ்ஞானமய வானந்தமயமாகிய

Koviloor Digital Library



பஞ்சகோசங்களென்ன, சுகதுக்கம் பசிதாகஞ் சராமரணங்க ளாகிய சுரோமியென்ன, விவைகளுடைய மித்தியா தாதாத் மிய சம்பந்தத்தினலே யந்தந்தச் சொரூபிபோலே நீலவஸ்தி ராதியோகத்தினலே படிகமான தெப்படியோ; அப்படியிருக் கிருர்.

(இ-ம்.) நிர்மலமான படிகமானது நீலரத்தாதி வர்ணமா யிருக்கிற வஸ்திர புஷ்பாதிகளுடைய சம்பந்தத்தினலே யந்த ந்த வர்ணத்தையுடைத்தானதாக வெப்படித் தோணுகிறதோ; அப்படிச் சுத்தரான வாத்மாவு முன்சொன்ன வன்னமயாதி சுகதுக்காதி மித்தியாதாதாத்மிய சம்பந்தத்தினலே யந்தந்தச் சொரூபிபோலே தோணுகிருரேயல்லாமற் பரமார்த்தமாயில் லை யன்னமய ரசமயனே யாத்மாவென்று சொல்லுகிற சுருதி சூக்ஷும வஸ்துவை தெரிசிப்பிக்கிற நிமித்தியமா யுபாதி சகி தரான வாத்மாவைச் சூசிப்பித்ததேயல்லாமற் பாரமார்த்தமா யாத்மாவை யன்னமயாதி சொரூபியாகச் சொல்லாதபடியின லேயு மாத்மா பஞ்சகோசவிலக்ஷணரானபடியினலேயு மப்ப டிப்பட்ட வாத்மாவானவர் நித்தியமுக்தரே; சந்தேகமில்லை.()

(அ-கை.) அசங்கமான வாத்மசொரூபத்தைப் பிரித்தறிகிற விவேகஞ் சொல்லுகிருர்.

[சு-ம்.] பிராணமயாதி நான்கு கோசங்களோடுங்கூடிய தூ லசரீரத்துக்கு மலைகளின் விகாரங்களுக்கும் பிரத்திய காத் மாவை வேறுபட்டிருக்கின்ற சுத்தராகச் சுருதிக்கனுகூலயுக்தி விசாரத்தினலே விவேகியானவனு முமியாதியோடுகூடிய தண்டுலத்தைப் பிரித்தறிவதுபோற் பிரித்தறிவன்.

(வி-ம்.) இது உமி, இது தவிடு, இது தண்டுலமென்று பிரித் தறியப்படாமலிருந்ததை நல்ல உலக்கையினலே பலமுள்ள வாள் குத்திப்புடைத்தெடுக்கிறபோது சுத்தமான தண்டுலத்

Koviloor Digital Library



றை யெப்படி யுமி தவிடுமுதலானவைகட்கு வேருயறிகிருர் களோ; அப்படிப்போல நிடயுக்தி விசாரத்தினுலே யாத்மா வைப் பஞ்சகோசங்கட்கு வேரு யறியத்தக்கது.

(இ-ம்.) இந்தத் தூலசூக்ஷம சரீரங்களானதுகள் கடம் போலே யனுத்மகாரியமானபடியினுலேயு மந்தச் சரீரமிரண் டுக்குங் காரணமான வவித்தை யனுத்மபீசமானபடியினுலேயு மாத்மாவை; இந்தச் சரீரத்திரயாந்தர யுக்தமான பஞ்சகோசங் களுக்கும் வேறுபட்டவராகவே யறியத்தக்கது. (௰௬)

(அ-கை.) ஆத்மாவானவர் சர்வகெதரேயாளுற் சர்வதிக்கி லேயுஞ் சர்வாளாலேயு மேன்காணப்பட வில்லையென்று சங் கித்துக்கொண்டு சமாதானஞ் சொல்லுகிருர்.

[சு-ம்.] பிரத்திய காத்மாவானவ ரவ்வியத்த மகதகங்காரமு தலான வாகாசாதி பூதபௌதிகங்களிலே யெல்லாம் வியாபி த்திருந்தாலும்; சடாளாயும், பாகியப்பிரவிருத்த விந்திரியாளா யுமிருக்கிற சர்வஜனங்களாலேயும், சர்வதிக்கிலேயு மறியப்ப டுகிறதில்லே. பின்னேயோவென்ருல்? ராகத்துவேஷாதி விர் த்திகளினுலே கலங்கிப்போகாமற் சற்குருவினுலுபதேசிக்கப் பட்ட மஹாவாக்கியார்த்த சிரவணமனன நிதித்தியாசன சென்னியமா யிருக்கிற வகண்டாகார விர்த்தியினுற் பரிபக்கு வமாயிருக்கிற புத்தியினுற்முனே சுத்தமாயிருக்கிற வுதகதற்ப ணுதிகளிலே பிரதிவிம்பம்போல வறியப்படுவர்.

(இ-ம்.) ஆத்துமாவானவர் சர்வத்திலேயும் வியாபித்துக் கொண்டிருந்தாலும்; சடபுத்திகளுக்கு வொருதிக்கிலேயுங் காணப்படார். பின்னேயோவென்ருல்? நிர்மல தற்பணுதிகளி லே பிரதிவிம்பந் தோன்றுகிறதுபோலக் கலங்காத புத்திவிர் த்தியிலே தோன்றப்படுவர். (௰௭)

Koviloor Digital Library



(அ-கை.) தேகேந்திரிய சகிதராயிருக்கிற வாத்மாவுக் குதாசீனபாவத்தை ராசபுருஷதிருஷ்டாந்தத்தினுலே சொல்லுகிருர்.

[கஅ-ம்.] ஸ்தூலதேகமென்ன, தேகேந்திரியங்களென்ன, பஞ்சவாயுக்களென்ன, சங்கற்ப விகற்பாத்மகமான மனசென்ன, நிச்சயாத்மகமான புத்தியென்ன, வஞ்ஞானமென்ன, இவைகளைக்காட்டிலும்; விலக்ஷணராயுஞ் சார்வகாலமுஞ் சரீரவிந்திரியமனே புத்திப் பிரகிருதிகளுடைய வியாபாரங்களுக்குச் சாக்ஷியாயு மிருக்கிற பிரத்தியகாத்மாவைப் வுதாசினராக விவேகியான மஹாபுருஷன் ராஜா காரியங்களிலுதாசினனு யிருப்பதுபோலவறிவன்.

(இ-ம்.) தன்னுடைய நகரத்திலேயிருக்கிற ராஜாவானவன் மந்திரிமுதலான காரியஸ்தா டன்னுடைய சன்னிதானத்திலே யனேக காரியங்களிற் பிரவிருத்திக்கத் தானவாளுடைய காரியங்களிலே சங்கியாமலிருந்தாலு மந்தந்தக் காரியங்களுக்கு சாக்ஷிமாத்திரனுக வெப்படிப் பார்த்துக்கொண்டிருக்கிருனே; அப்படிபோல ஆத்மாவானவர் சட்பரிணமமாகி யதிரிசியங்களாயிருக்கிற தேகேந்திரிய மனேபுத்தி பிரகிருதிகடன் சன்னிதானத்திலே பிரவிருத்திக்கத் தனக்குச் சம்பந்தமில்லாதிருந்தாலுந் தானவைகளுடைய பிரவிருத்திகளுக்குச் சாக்ஷிமாத்திரமாய்ப் பார்த்துக்கொண்டிருக்கிறபடியினு லுதாசினரென்றே சித்தாந்தம். (௰அ)

(அ-கை.) ஆத்மாவுக் கவிகாரித்துவம் யுக்தமென்றே தோணுகிற தெதினுலென்முல்? அந்தாத்மாவானவர் சர்வதாவியாபாரங்களை யுடைத்தானவராகவே காணப்படுகிருரென்றசங்கித்துக்கொண்டு சமாதானஞ்சொல்லுகிருர்.

Koviloor Digital Library



[சு-ம்.] மனசுமுதலாகிய சர்வேந்திரியங்களும் வியாபாரகாரிகளாயிருந்துள்ளளவிற் பிரத்திய காத்மாவானவர் குருசாஸ்திராதி ரகிதாளாயிருக்கிற அவிவேகிகளுக்கு வியாபாரத்தையுடைத்தானவர்போலே மேகங்கள் வாயுவசத்தினாலோடுகிறதைச் சந்திரனோடுகிறதாய்க் காண்பதுபோலக் காணப்படுவர்.

(உ-ம்.) இராத்திரிவேளையி லாகாசத்தில் மேகங்கள் சஞ்சரிக்கிறதைக் கண்டு பாலாளானபேர்கள் மேகங்களோடுகிறதென்பதை யறியாமற் சந்திரனோடுகிறானென் றறிந்தொருவருக்கொருவர் அடே சந்திரனோடுகிறானென்று சொல்லி விளையாடுகிறார்கள். அப்படிக்குக்கண்டு சொன்னபோதிலும்; பாரமார்த்தமாய்ச் சந்திரனோடவேயில்லை. அப்படிப்போல விந்திரியங்களானவைக ளவைகளுடைய விடயங்களிலே பிரவிர்த்திக்கிறதைக்கண்டு சற்சங்கமில்லாதவர்களாயிருக்கிற மூடசிரோமணிகளானபேர்கள் சர்வவிடயங்களிலேயு மாத்மாவைப் பிரவர்த்திக்கிறாரென்று நிரவிசாரியாமற் சொல்லுகிறார்க ளவர்க ளப்படிக்குச் சொன்னாலும் காலத்திரயத்திலேயும் ஆத்மாவானவர் பிரவர்த்திக்கிறவரேயில்லை. தனக்கன்னியமே யில்லாதநின்றாற் றானொன்றைப் பிரவர்த்திப்பிக்கிறதுமில்லை. எதினாலென்றாற் பாரமார்த்தமா யாத்மாவானவர் கேவலமவிகாரியா யசங்க சித்துரூபியானபடியினாலேயுந் தொய்தவர்ச்சிதராளபடியினாலேயு மென்றறிக. (மகூ)

(அ-கை.) தேகேந்திரிய மனோபுத்திகளு மாத்மாவைப்போலே சேதனங்களாகக் காணப்படுவா னேனென்று சங்கித்துக்கொண்டு சமாதானஞ் சொல்லுகிறார்.

[சு-ம்.] ஸ்தூலதேக ஞானேந்திரிய கன்மேந்திரிய பிராணாதிகள் மனோபுத்திகளாகிய விவைகள் பிரத்தியகாத்மாவினுடைய சேதனபாவத்தை யத்தியாச சம்பந்தத்தினாலே யவலம்

Koviloor Digital Library



பித்துக்கொண்டு தன்றன்விடயத்திற் ஜன்ங்கள் சூரியப்பிரகாசத்தை யவலம்பித்துக்கொண்டு ஜகத்துவியாபாரஞ் செய்வதுபோலப் பிரவிருத்திக்கிறதுகள்.

(இ-ம்.) சூரியப்பிரகாசம் அன்றியில் ஜனங்கள் ஜகத்துவியாபாரஞ் செய்யாததுபோல வாத்மப்பிரகாசமன்றியி லிந்திரியாதிகளுக்கு தன்றன் விடயத்திற் பிரவிருத்தியில்லாததினுலே யாத்மாவே சேதனர் அனுத்மாக்களெல்லாஞ்சடம். (உ0)

(அ-கை.) நான் பிறந்தேனென்றும், நான் வளர்ந்தேனென்றும், நான் பாலியாதி யவத்தைகளைக் கிரமத்திலநுபவித்துக்கொண்டு வருகிறேனென்றும், நான் பார்க்கிறேன், கேழ்க்கிறேன், வசனிக்கிறேனென்று இதுமுதலான வனேக விகாரங்களையெல்லா மநுபவித்துக்கொண்டிருக்கிற வாத்மாவுக் கவிகாரித்துவமெப்படிச் சொல்லப்படுமென்று சங்கித்துக்கொண்டதற்குச் சமாதானஞ் சொல்லுகிருர்.

[சு-ம்.] ஆத்மானுத்மப் பரிக்ஞியான சூனியாளாயிருக்கிற பாமராள்; ஸ்தூலதேகம், தேகேந்திரியம், வியானுதி பஞ்சவாயுவு, மனேபுத்திகளாகிய விவைகளின் குணங்களையுந் திரிவித கரணங்களாற் செய்யப்பட்ட திரிவிதகன்மங்களையுஞ் சத்துவரசோ தமமலரகிதராயுஞ் சச்சிதானந்தசொரூபியாயுமிருக்கிற பிரத்தியகாத்மாவினிடத்தி லாத்மானுத்மாக்களை பிரித்தறியாத வக்ஞியானத்தினுற் ககனத்தில் நீலதவுதாதி வர்ணம்போ லாரோபிக்கிருர்கள்.

(இ-ம்.) நிரம்சமாயு மதிந்திரியமாயுமிருக்கிற வாகாசத்திலாகாச பரிக்ஞியான சூனியாளாயிருக்கிறபேர்கள் நீலாதிவர்ணங்களை யெப்படி யாரோபிக்கிருர்களோ; அப்படி நிரம்சராயு மதீந்திரியராயு மமலராயுஞ் சச்சிதானந்தாத்மகராயுமிரு

க்கிற வாத்மாவினிடத்தி லாத்மசொரூப பரிக்ஞான சூனியா
ளாயிருக்கிற தேகாத்மவாதிகள் விகாரங்களை யாரோபிக்கிறார்க
ளாகையா லிவ்விகாரங்களெல்லா மாத்மதன்மமன் றனாத்மா
க்களாகிற தேகேந்திரியாதிகளுடைய தருமமென்றே சித்
தாந்தம். (உக)

(அ-கை.) கர்த்திருத்துவ போக்திருத்துவாதிகளெல்லா
மாத்மாவிடத்திற் சார்வதல்ல மநுபவிக்கப்படுகிறபடியின
லவைகளைத் தள்ளக்கூடாதென்று சங்கித்துக்கொண் டதற்குச்
சமாதானஞ் சொல்லுகிறார்.

[சு-ம.] ஆத்மபேதத்துக் கேதுவாயிருக்கிற வந்தக்கரணோ
பாதியினுடைய கர்த்திருத்துவ போக்திருத்துவ சுகித்துவ
துக்கித்துவ சமுசாரித்துவாதிகளினு மஞ்ஞான வசத்தினாலே
வந்தக் கரணசாக்ஷியான பிரத்தியகாத்மாவினிடத்தி லாத்ம
விசாரசூன்யாளாயிருக்கிற பிராகிருதாள் சலோசலனாதிகளை
யதிற் பிரதிவிம்பித்த சந்திரனிடத்தி லாரோபிக்கிறதுபோல
வாரோபிக்கிறார்கள். (உஉ)

(அ-கை.) கர்த்திருத்துவாதிகளெல்லா மந்தக்கரண தரும
ங்களென்று மவைகளிலொன்றுங் காலத்திரயத்திலேயு மாத்
மாவுக்கு சம்பந்தமில்லையென்றும் பூர்வசுலோகத்திலே சொல்
லப்பட்டிருக்கிற வர்த்தத்தை யன்னுவய விதிரேகயுக்திகளினா
லே திடப்படுத்துகிறார்.

[சு-ம.] இராகத்திவேஷ காமக்குரோத லோபமோக மத
மாச்சரிய வீரிஷை யசூயை டம்பந் தர்ப்ப மகங்காரங்க ளிச்சா
பத்தி சிரத்தைகளாகிய பதினாறுகளாலுண்டாகிற பிரதிகூல
வநுகூல சித்தவிர்த்திகளாகிய சுகதுக்கங்க ளந்தக்கரணமிருக்
கிற ஜாக்கிரசொப்பனங்களிலுண்டாகிறது வந்தக்கரணம் லய
மானசுழுத்தியிலே மேற்கூறிய ராகாதி விர்த்திகளினாலுண்

Koviloor Digital Library



டாகிய துக்கசுகாதிக ளணுமாத்திரமானுலுமில்லை யந்தச் சுழு த்திக்கு மாத்மாவானவர் சாக்ஷியாகவே யிருக்கிறுர். இதனு லேதாச்சுதென்றுல்? யாதொரு வந்தக்கரணமுண்டானுற் சுக துக்கங்களு முண்டென்கிற தன்னுவய யுக்தி யதற்குச் ஜாக்கி ரசொப்பனங்களிரண்டு மநுபவசித்தமான திருஷ்டாந்த மியா தொரு வந்தக்கரணமில்லாதபோது சுகதுக்கங்களில்லையென் கிறது விதிரேகயுக்தி இதற்கு சுழுத்தியே யநுபவசித்தமான திருஷ்டாந்த மாகையாற் சகலதுக்கசுகங்களு மந்தக்கரணத் தினுடைய வியாபார மாத்மாவுக்கோவென்றுற் காலத்திரயத் திலேயும் யாதொரு வியாபாரமுமில்லை. (உங)

(அ-கை.) ஆனுலாத்மாவுக்குச் சொருபந்தா னேதென்று சங்கித்துக்கொண் டதற்குச் சமாதானஞ் சொல்லுகிறுர்.

[சு-ம்.] சூரியனுக்குப் பிரகாசமும் ஜலத்துக்குச் சயித்திய மு மக்கினிக் குஷ்ணமு மெப்படிச் சொருபமோ; அப்படியே காலத்திர யாபாத்தியராயுஞ் சிற்சொருபராயும் பாமப்பிரீதி க்கு விஷயராயு நித்தியராயு நிர்மலராயு மிருக்குகையே பிரத் திய காத்மாவுக்குச் சொரூபம். (உச)

(அ-கை.) ஆத்மாவானவர் நிருவிகாரியாயிருக்கிறபோ தவ ருக்கு நானறிகிறேனென்கிற விர்த்திகடா னெப்படிக்கூடுமெ ன்று சங்கித்துக்கொண் டதற்குச் சமாதானஞ்சொல்லுகிறுர்.

[சு-ம்.] பிரத்தியகாத்மாவினது சச்சித் தம்சமாகிய சித் தும், அந்தக்கரண விர்த்தியாகிய சடமும், ஆத்மானுத்மாக்க ளைப் பிரித்தறியாத வஞ்ஞானதோஷத்தினுலே யன்னியோன் னிய தாதாத்மியத்தாற் கூடிக்கலந்ததுதானே யகம்விர்த்தியா ய்ப் பரிணமித்தறிகிறேனென்று பிரவிருத்திக்கிறது.

Koviloor Digital Library



(வி-ம்.) நிரம்சராயிருக்கிற பிரத்திய காத்மாவினிடத்தி லம்சந்தா னேதென்றால்? ஆத்மாவானவர் பரமார்த்தமாய் அம்சரஹிதராயிருந்தாலும்; பிரதிதி திருஷ்டியைப்பற்றிப் பார்க்கிறபோ தனுதி யநிர்வசநீயமாயிருக்கிற வவித்தையாவசத்தி னாலே நான் ஜீவனுக்குமென் றாத்மாவைக் காட்டினு மன்னி யம்போல வொரு ஜீவப்பிரமை தோன்றுகிறபடியினு லந்த ஜீவனை யம்சம்போலே வியவகாரகாலத்தி லொத்துக்கொண் டம்சமென்று சொல்லப்பட்டது.

(இ-ம்.) ஆத்மாவினுடைய பிரதிவிம் பம்சமாயிருக்கிற சிதாபாச சைதன்னியமு மந்தக்கரணவிர்த்தியுங் கலந்ததுதானே யகம்விர்த்தியாய்ப் பரிணமித்துக்கொண்டு நானறிகிறே னென்கிற வகமாகாரவிர்த்திக் ஞானமானது சிதாபாச சம்பந்தத்தோடேகூடின வந்தக்கரணவிர்த்தியேயல்லாமற் சின்மயரான பிரத்திய காத்மாவினிடத்தில் யாதொரு வியாபார முமில்லை. (உரு)

(அ-கை.) பூருவசுலோகத்திற் சொன்ன வர்த்தத்தைத் தானே பிரகாசமாய்த் தெரிவிக்கிறார்.

[சு-ம்.] பிரத்தியகாத்மாவுக்கு விகாரமானதில்லை. புத்திக் கொருக்காலு நானறிகிறேனென்கிற க்ஞானமானதில்லை. அந்தப்புத்தியிலே பிரதிவிம்பித்த சிதாபாசனுனவன் றன்னுடைய பிரகாசத்தோடேகூடிப் பிரவிருத்திக்கிறதாயிருக்கிற வந்தக்கரணதருமமான கர்த்தருத்துவாதி சகலசமுசார விகாரத்தையுந் தன்னுதாக மிகவுமறிந்து நானறிகிறவனென்று நான் பார்க்கிறவனென்று மோகத்தையடைகிறான்.

(இ-ம்.) ஆத்மாவானவர் சுபாவத்திலே விகாரஞுனியர். அந்தக்காலத்துக்கா லொருகாலு ஞானத்தினுடைய வாச

Koviloor Digital Library



ணையேயில்லை. பின்னையோவென்றால்? அகங்காரனாயிருக்கிற சிதாபாசனானவ னொருவனுற்பத்தியா யவன் றத்தாய பிண்டம்போல தாதாத்மிய தோஷத்தினாற் சித்துஞ்சடமும் கலந்த விரண்டுகளின் பிரிவுதெரியாம லந்தக்கரணத்தினுடைய சகல வியாபாரத்தையுந் தன்மேலெடுத்துப் போட்டுக்கொண்டு நானறிகிறேனென்றும், நான் பார்க்கிறேனென்றும், மோகத்தையடைந்து பிராந்தனாயிருக்கிறான். (உசு)

(அ-கை.) பூருவ சுலோகத்திலே நிருவிகாரியாயிருக்கிற வாத்மாவுக்குச் சமுசாரித்துவங்கூடாதபடியினாலே சித்துருபியான வாத்மாவுக்குப் பிரதிவிம் பாம்சனாயும் ஜீவனென்கிற பேரை யுடைத்தானவனாயுமிருக்கிற சிதாபாசனாகிற மித்தையாபுருடனை வியவகாரதிசையிலே சத்தியம்போலே யங்கீகரித்துக்கொண்டு பிற்பாடு கேவலம் பாரமார்த்திக திசையிலே நின்று பார்க்கிறபோது காலத்திரயத்திலேயு மாத்மாவினிடத்திலே யந்தக்கரணோபாதியே யில்லாதபடியினா லந்தக்கரணோபாதியிலே பிரதிவிம்பிதனா யொரு சிதாபாசனுண்டென்றங்கீகரிக்கவேகூடா தினாற் பிரதீதியைப்பற்றி யப்படியொரு சிதாபாசனுண்டென்று சொல்லவந்தாற் பிரதீதியே மித்தையானபடியினா லந்த மித்தையாப் பிரதீதியைப்பற்றி வந்தச் சிதாபாசனு மித்தையாசொருப மிந்த மித்தையாமாத்திரனாயிருக்கிற சிதாபாசனுக்கு நிசசொரூபமாய்க் கூடஸ்தாத்மாவே மிஞ்சுகிறபடியினாலேயும், இதுவுமல்லாமல் வியவகார திசையிலேகூடச் சிதாபாசனானவன் றனக்கதிஷ்டானமாயிருக்கிற கூடஸ்தாத்மாவைவிட வேறில்லாதபடியினாலேயும், கேவலம் வஸ்துவானபடியினாலேயும், பூருவசுலோகத்திலே யாத்மாவைவிட வேறேயொரு சிதாபாசனுண்டென்று சொன்னது கேவலம் அப்பியாசதிசையைப் பற்றினதே

தவிர வாரூடநிலையைப் பற்றினதன்ருறு லாரூடநிலையி
லேயோவென்று லாத்மாவைவிடக் காலத்திரயத்திலேயுஞ்
சிதாபாசன் வேறில்லைப் பின்னையோவென்று லாத்மாவான
வன் தான்றானே தன்னுடைய மதவசத்தினாலே யஞ்ஞான
மாய் விவர்த்தித்துக்கொண்டு தனக்கு விலாசார்த்தமாய்
வேண்டுமென்று ஜனன மரண பயப்பிரந்தியை யடைகிறா
ரென்று மப்படி ஜனன மரண பயப்பிரந்தியை யடைந்
ததினா லாத்மாவினுடைய சச்சிதானந்த சொரூபத்துக் கணு
மாத்திரமானாலு நாசமில்லாதபடியினா லந்த ஜனன மரண
பயப்பிரந்தியானது பரமார்த்தமா யாத்மானந்த விலாசமே
யன்றியி லொருநாளுஞ் சமுசாரமாகமாட்டா திப்படியிருக்
கிற வாத்மாவுக்குத்தானே யிந்த வாத்மானந்த விலாசக் கிரீ
டையானது பொருமென்று புத்திசம்மதமா யொழிவுண்டா
கிறபோ தவனுக்கிந்த விவேகஞானம் வாராமலிருந்தாலும்
பலத்தியாக பூருவமாகப் பண்ணப்பட்ட சற்கருமாநுட்டான
த்தினாலே பிரசன்னரான ஸ்ரீ பரமேஸ்வரருடைய பிரசாதத்
தினாற் சாதன சதுட்டையமுண்டாய் சற்குருலாபமுங்
கிடைத் தவரிடத்திற் சிரவண மனன நிதித்தியாசனங்களைப்
பண்ணி தன்னுடைய யதார்த்தசொரூபந் தானாகிறபோது
முன் நானே யென்னுடைய வாத்மானந்த விலாசத்தினாலே
விளையாடினேனேதவிர வொருநாளு நான் ஜனனமரண ரூப
மான சமுசார விகாரத்தை யடையவில்லையென் றறிந்து நிற்
பயனாகிறானென்று மிப்படிப் பூருவமநுபவிக்கப்பட்ட வனே
கம் ஜனனமரணப் பிரந்தியெல்லாஞ் சுவாத்மானந்த விலா
சமானபடியினாலே தன்னைவிட வொருசமுசார முண்டென்
ன்று மதை நானடைந்தவனென்றுஞ் சொல்லுகிறது கேவ
லம் பிராந்தனுடைய வாதமானபடியினாலேயும் பிரந்திமாத்

Koviloor Digital Library



திரமாயிருக்கிற சமுசாரத்தை நிருவகிக்கிற நிமித்தியமாய் வேறேயொரு சிதாபாசனென்கிற ஜீவனை யங்கீகரிக்கவேண் டாமென்று திருஷ்டாந்த பூருவகமாய்ச் சொல்லுகிறார்.

[சு-ம்.] ஆத்மாவானவ ரேதுப்பிரமாண ரகிதமான தன் னுடைய சுவாத்மானந்த விலாசத்துக்குச் சாதனமாயுந் தன் னுடைய விவர்த்தகாரியமாயு நானறிகிறேனென்கிற மறை ப்பினாலே யஞ்ஞான சொரூபமாயு நானறியேனென்றாகிலு மறிகிற வறிவினாலே ஞானசொரூபமாயும் வியவகாரகாலத்தி லே தன்னைவிடப் பின்னம்போலே யிருந்தாலும் பரமார்த் தத்தில் விசிறியும் காற்றும்போலத் தன்னுடைய வபேதமான படியினாலே தன்னுடைய சொரூபமாயுமிருக்கிற வஞ்ஞான த்தினுடைய விலாசத்தினாலே பஞ்சகோசவிலக்ஷணனாயு மவத்தாத்திரய சாக்ஷியாயு மசங்க சச்சிதானந்த சொரூபியா யுமிருக்கிற வகம்விர்த்தி யாலம்பனான தன்னை யஞ்ஞான காரியமான வந்தக்கரணோபாதியிலே பிரதிவிம்பித்து கர்த் தாகம் போக்தாகம் சாதோகம் நட்டோகமென்கிற வந்தக் கரணாதி தருமங்களை தன்னதாக வநுபவிக்கிறவன்போலே விக்ஷேபப்படுகிற சிதாபாசனாக விசாரியாம லறிந்து தான் றானாகவே யிருக்கிறபோது தானே தன்னைவிட வேறே யொரு சிதாபாசனாக வானதுபோலேயு மதினாலே யத்துவிதி யனாயு மபரிச்சின்னனாயுமிருக்கிற தனக்குச் சத்துவிதியத்து வமும் பரிச்சின்னத்துவமும் வந்ததுபோலேயு மெண்ணிக் கொண் டப்படியெண்ணின தொய்த வாசனாக்ஞானத்தி னாலே யனேக ஜனனமரணப் பிரவாக பரம்பர சென்னிய மாயிருக்கிறமஹா பயப்பிரதிநிதியை யடைவ னென்பதற்குக் கருத்தென்னவென்றாற் கேவலம் மத்துவிதிய சொரூபியா யிருக்கிற வாத்மாவுக்குப் பரமார்த்தமாய்ப் பயமில்லாதப

Koviloor Digital Library



டியினாலேயும் வியவகாரகாலத்திலே தனக்கு விலாசார்த்த
மாய்த் தன்னைமறந்து பயந்தவன்போலே விளையாடுகிறபடி
யினாலேயும் பயத்தை யடைந்தவன்போலே யடைகிறானெ
ன்பதே கருத்து. ஆனா லாத்மாத்தானே யஞ்ஞானமாய்
விவர்த்தித்தற் கென்ன வேதுவென்று லாத்மானந்தவிலாச
மே யேது இதற்கென்ன பிரமாணமென்று லாத்மாவான
வர் மதவசத்தினாலே மாயையாயு மவித்தையாயு மானாரென்
றும் மாயையாயு மவித்தையாயுஞ் சுயமே பவித்தாரென்றுஞ்
சுருதிகளிலே கோசிக்கிறதுகளே பிரமாண மானா லாத்மாவி
னிடத்திலே மதங்கூடுமோ வென்று லவரிடத்திலே வாசா
மகோசரமான மஹானந்த மிருக்கிறபடியினால் மதஞ் சித்த
மாய்க்கூடும். அதுதா னெப்படியென்று லாத்மாவினுடைய
வானந்தமான தாத்மாவினிடத்திலே யுல்லாச விலாசத்தை
யடைந் ததுதானே பொங்கிவடிகிறபோது மதமென்றும் அது
தானே யேகிபவிக்கிறபோது நிருவிகற்பமென்றும், விவ
ரிக்கப்படு மிதற்கு திருஷ்டாந்த மெப்படியென்று லிந்திர
சால மகேந்திரசால மாடுகிறவனிடத்திலிருக்கிற வித்தை
யான தவனிடத்திலுல்லாச விலாசத்தையடைந் தவனிடத்
தினின்றும் வெளிப்படுகிறபோ திந்திரசால மகேந்திரசாலப்
பிரபஞ்சமாயு மவனிடத்தி லேகிபவிக்கிறபோ திந்திரசால
வித்தையாடின புருஷன்மாத்திரமாகவு மிருப்பதே திருஷ்
டாந்த மாகையினாலே மதமென்று சொல்லப்பட்ட சுவாத்மா
னந்த விலாசக் ஞானமே சுவாத்மானந்த லயமென்கிற நிரு
விகற்பக்ஞானமானபடியினாலேயு நிருவிகற்பக் ஞானமென்று
சொல்லப்பட்ட சுவாத்மானந்த லயமே சுவாத்மானந்த விலா
சமென்கிற மதமானபடியினாலேயும் பிரகாசானந்த சொரு
பமான நிருவிகற்பானந்தக் ஞானத்தினாலே விமரிசானந்த

Koviloor Digital Library



சொரூபமா யிருக்கிற சுவாத்மானந்த விலாசக்ஞானத்துக் கானியில்லை. விமரிசானந்த சொரூபமான சுவாத்மானந்த விலாசக்ஞானத்தினாலே பிரகாசானந்த சொரூபமாயிருக்கிற நிருவிகற்பக் ஞானத்துக்கு மானியில்லை. ஆனபடியினா லாத்மானந்தத்தினுடைய சங்கோச விகாசாத்மகங்களாயும் பிரகாச விமரிசாத்மகங்களாயுமிருக்கிற நிருவிகற்ப சவிகற்பானந்தங்களிரண்டுங் கேவல மாத்மானந்த மானபடியினா லிது சவிகற்பானந்தமென்று மிது நிருவிகற்பானந்தமென்றும் பிரமிக்கவேண்டியதில்லை. ஆனபடியினாலே நிருவிகற்ப ஞானானந்த சொரூபியான வாத்மாவுக்கே சவிகற்பானந்த சொரூபமான ம்தமுங்கூட மப்படியே சவிகற்ப ஞானானந்த சொரூபியாய்த் தன்னை மறந்தவன்போலே கிரீடித்துக்கொண்டிருக்கிற வாத்மாவுக்கே நிருவிகற்ப ஞானானந்த சொரூபமான வைக்கிய பிராப்தியுங்கூட மிதற்குத் திருஷ்டாந்தமெப்படியென்றால்? நிருவிகற்ப சொரூபமான சுவர்ணத்துக்குச் சவிகற்ப சொரூபங்களான கடகமகுடாதிகளா யுற்பவிக்கவுங்கூட மப்படியே சவிகற்ப சொரூபங்களான கடகமகுடாதிகளுக்கு நிருவிகற்ப சுவர்ணங்களா யுற்பவிக்கவுங்கூட மானபடியினா லசேதனமான சுவர்ணத்துக்கே யுபயாத்மகத்துவத்தினா லவிரோதமில்லாம லிருக்கச் சேதனரானவாத்மாவுக் குபயாத் மகத்துவத்தினாலென்ன விரோத மொருவிரோதமுமில்லை. ஆகையா லாத்மாவிடத்திலுள்ள மதமே யாத்மாவானபடியினா லாத்மாவானவர் மதவசத்தினாலே மாயையாயு மவித்தையாயு மானாரென்றுஞ் சுயமே பவித்தாரென்றும் பூருவஞ் சுருதியினாற் சொல்லப்பட்டதே பிரமாண மானபடியினாலே யாத்மாவானவர் தானே தன்னுடைய விவர்த்தகாரியமான வஞ்ஞான விலாசத்தினாற் றன்னை கர்த்திருத்து

Koviloor Digital Library



வாதி கருமசயிதனுயிருக்கிற சிதாபாசனுக வநிந் தனேக ஜன னமரணப் பிரவாக செனிதமாயிருக்கிற சுகதுக்க சாகரத்தி லே முழுகிப்போனவன்போலே பிரமித்து மஹாபயப்பிர நிதியை யடைகிறு னிதற்குத் திருஷ்டாந்த மெப்படியென் றுற் பழுதையினிடத்தி லாரோபிதமாயிருக்கிற பாம்புபோ லென்று திருஷ்டாந்த மதுதா னெப்படியென்று லந்தகாராதி வேளையிலே விகார ரகிதமாயிருக்கிற ரச்சுவைப் பிரத்தியக்ஷ மாய் கண்ணுலேகண்ட புருஷ னதையுற்றுப்பார்த்து ரச்சுவெ ன்றறியாதநிலேலே ரச்சுவிலே கற்பிதமான சர்ப்பம் மித்தை யானபோதிலுஞ் சர்ப்பாகாரமாய் விவர்த்தித்த வதிஷ்டா னக்ஞானத்தினுலே ரச்சுவைவிட வொருசர்ப்பத்தைக் கண் டவ னெப்படி பயகம்பமாதிப் பிரதிநிதியை யடைவனே வப்ப டிப்போ லாத்மாவுமென்று சொல்லப்படு மிது சர்ப்பந்தா னென்று நிச்சயித்து பயந்தோடுகிறபோது தடுக்கி கீழேவிழு ந்து காலொடிந்து மிருந்த பயகம்பமாதிகளை யடைகிறுன் பிற்பாடு திரவிசாரித்து பார்த்தவுடனே சர்ப்பமானது கேவ லம் மித்தையா மாத்திரமாகப் போகிறபடியினு லந்த மித்தை யாசர்ப்பத்தைத் தொட்டு வந்த பயகம்பமாதிகளும் மித்தை யாசொருபங்க ளெதினுலென்று லிது ரச்சுவென்றறிந்த வுட னே பயகம்பமாதிக ளிவிர்த்திக்கிறது பயகம்பமாதிக ளிவி ர்த்தித்தாலு மந்தவேளையி லோடியொடிந்த காலேன் சுடடவி ல்லையென்றுற் சொப்பன விந்திரியம்போலென்று திருஷ் டாந்த மதேதென்றுற் சொப்பனவேளையி லொருபெண் ணுடேபோகித்த புருஷனுக்குத் தானுமவளு மேகமாயிருந்த கேளிக்கிரகமும் அதற்குள்ள விதானதோரணுதி யலங்கார மும் யிரத்தினமய தம்பகுட்டியமாதிகளு நவரத்தினமய வமுசதுளிகாதி மெத்தைகளு மவளுடைய தனபருவத காடா

Koviloor Digital Library



விங்கங்களுங் கண்ணைவிழித்தவுடனே மித்தையாய்ப் போகிறது யிவைகளெல்லா மித்தையானலு மிந்திரியகலனமாத்திரஞ் சொப்பனம்போய் ஜாக்கிரத்துவஞ் சத்தியமாய்க் காணப்படுகிற தப்படிப்போ லிங்கே சர்ப்பப் பிரமைகாலத்திலோடி யொடிந்தகால் சர்ப்பப்பிரமை தெளிந்துங் கொஞ்சநாட் சத்தியமாகவே யிருக்கு மதினலே சர்ப்பப்பிரமை சத்தியமாகமாட்டா தப்படிப்போற் ருட்டாந்திக சொருபரான பிரத்திய காத்மாவானவர் பூர்வ மிந்தப்பிரகாரந் தன்னுடைய விவர்த்த காரியமாயுஞ் சுவானந்தோ வுல்லாச விலாசாத்மகமாயுமிருக்கிற வஞ்ஞானத்தினலே பிரக்ஞான கன சொரூபியாயிருக்கிற தன்னைமறந்தவன்போலே மறந்து தனக்கன்னியனு யொரு மித்தையா சிதாபாசனைத்தானே தானென்றறிந் ததினலே யனேக ஜனனமரணப் பிரவாகப் பயப்பிரதிதியை யநுபவிக்கிறவன்போ லநுபவித்துக்கொண்டிருந்து வதன்பி னனேக ஜன்மார்ச்சித புண்ணிய புஞ்ச பரிபாக வசத்தினலே தனக்கிந்த ஜனனமரண சுகதுக்கம் போதுமென்று தனக்கே யொழிவுவந்து தேகமுதற் பிரமலோகவரைக்குமுண்டான சமஸ்த விடயங்களிலேயும் விரக்தி பிறந்து சாதனசதுஷ்டய சம்பன்னனுய்ச் சற்குருவை யடைந்தவரிடத்தில் வெகுகாலஞ் சிரவண மனன நிதித்தியாசனங்களைப்பண்ணித் தன்னைத் தானுகவறியும்போது பஞ்சகோச விலக்ஷணனுயு மவஸ்தாத்திரய சாக்ஷியாயு மசங்கசித்ருபியாயுமிருக்கிறநா னந்தக்கரணப் பிரதிவிம்பிதனுன சிதாபாசனன்று பின்னையோவென்ரு லந்தக்கரணத்துக்கு மந்தக்கரண வவத்தாரூபங்களான ஜாக்கிர சொப்பன சுழுத்திகளுக்கும் ஜாக்கிரதாதி, யபிமானிகளாயிருக்கிற விசுவ தைசத பிராக்ஞளுக்கு மதிட்டான சொரூபனுயுஞ் சாக்ஷிமாத்திர

Koviloor Digital Library



ருயிருக்கிற பரமாத்மாவென் றிந்தப்பிரகாரம் பரமார்த்த சொரூபியா யிருக்கிறதா னறியப்பட்டானே யானு லந்தக்ஷ ணத்திலே ஜனனமரணப் பயப்பிரதிதியை யுடைத்தாகாதவ னுக விளங்குவா ரானுற் றன்னைப் பரமாத்மாவாக வறிந்தவுட னே சகலபயங்களு நிவிர்த்தியடையு மானுற் பிரமாத்ம வைக் கியக் ஞானிகளிடத்திலே சுகதுக்காதி சமுசார வியவகார ங்களும் புத்திரதாராதி போசனுர்த்தமாய்க் கிருஷிவாணிச்சிய யுத்தியோக யாசகாதிகளுங் கூடுமோவென்முற் பிராரத்த கருமவசத்தினு லவைகளெல்லாங்கூடு மஃதெப்படியென்முற் பிரமாத்ம வைக்கியக் ஞானத்தினு லஞ்ஞான வாவரணங்க ளும் ஆகாமிய சஞ்சித கருமங்களும் நஷ்டமாய்ப் போயும் பிராரத்த கருமமாவது சர்ப்பப் பிராந்திபோய் ரச்சுக்ஞா னம் பிறந்தவுடனே யிந்தப்பிராந்தி காலசென்னியமான பய கம்பமாதிக ணிவிர்த்தியாயு முடனே நிவிர்த்தியாகாமலிருந் தொடிந்த கால்போலேயுஞ் சொப்பனம்போய் ஜாக்கிரத்து வந்தவுடனே சொப்பனங்களிற் போகாதிகளெல்லா நிவிர்த் தியாயுஞ் சொப்பனவிந்திரிய நிவிர்த்தியாகாம விருந்ததுபோ லேயுங் கருமக்ஷயரூபமான ஸ்தூலசரீர பதனபரியந்தந் தெத் தபட நியாயமாயிருக்கு மாகையினுலே பிரமாத்ம வைக்கியக் ஞானத்தினுலே சகல பயங்களும் நிவிர்த்தியாயும் பூருவஞ் சொல்லப்பட்ட சகல சமுசார வியவகாரங்களும் கொஞ்ச நாள் நிவிர்த்தியாகாமலிருக்கு மானபோதிலும் பகிர்முகா ளாயிருக்கிற பாரூடைய திருஷ்டியைப்பற்றிப் பிராரத்த வசத்தினுலே யிப்படிக்கூடுமென்று சொன்னதேதவிர வந்தர் முக திருஷ்டியி லொரு வியவகார லேசமுமில்லை. ஆனு லு மொருவேளையிலே தோணப்பட்ட வியவகாரங்களு மாத் மவிலாசமானபடியினுலே யாத்மாவே யிதுவுமென் றறிந்து

Koviloor Digital Library



கொண்டு விவேகியானவ னிற்பயனாகவிருப்ப னிற்பயனாக விருப்பனென்பதற்குக் கருத்தென்னவென்றாற் பிரக்ஞான கன பிரத்தியகாத்ம சொரூபியாயுமிருக்கிற வாத்மாவுக்குப் பரமார்த்திகமாய்ப் பயமேயில்லாதபடியினாலே பயமில்லாதவ னிற்பயனாகிறதற்கு நிமித்தமில்லை யானாலுந் தனக்கு விலாசார்த்தமாய்த் தன்னுடைய வானந்த மதத்தினாலே தோணப்பட்ட ஜனனமரணப் பிரதீதியினால் வியவகாரகாலத்தில் பயந்தவன்போலே பயந்திருக்கிறபடியினாலே நிற்பயனா யிருக்கிறானென்பதற்குத் தனக் கொருபயமிருந்து பிற்பாடு விடுபட்டு நிற்பயனானவன்போலே யிருக்கிறானென்பதே கருத்து. இப்படிப் பயமில்லாதவனுக்கே யாகந்துவமா யொரு பயந் தோணுகிறதையு மவனுக் கது நிவிர்த்தியாகிறதையுந் நிரவிசாரித்துப் பார்க்கிறபோது பரமார்த்தமா யாத்மாவுக் கொருபயமுமில்லை யதற்கு நிவிர்த்தியுமில்லை. இப்படியிருக்கப் பூருவம் நான் ஜனனமரண பயத்தை யடைந்திருந்தேனென்றும், இப்போ ததுநிவிர்த்தியாய் நிற்பயனானேனென்றுஞ் சொல்லுகிற தாத்மாவுக் கிதொரு விலாசமாத்திரமே யன்றியில் வேறொன்று மன்றானபடியினாலே ஞானாஞானங்களால்வந்த பந்தமோக்ஷாதிகளொன்று மாத்மாவுக்குக் காலத்திரயத்திலேயுஞ் சம்பந்தமில்லைப் பின்னையோ வென்றாலிந்த ஞானஞ்ஞானங்களாலுண்டான பந்தமோக்ஷாதிக ளாத்மாவுக்கு சுவானந்த வுல்லாச விலாசமாத்திரமே; சரி. இப்படிப்பட்ட சுவாத்மானந்த விலாசத்தைவிட வேறொரு பந்தமோக்ஷங்களுமில்லை யந்த மித்தையா பந்தமோக்ஷங்களை நிருவகிக்கிறதற் காத்மாவைக்காட்டிலு மன்னியமாயொரு சிதாபாசனை யங்கீகரிக்கவேண்டியதுமில்லை. எதினாலென்றாற் குருவசனப்படிக் கநுபவநிஷ்டனான மஹாத்மாவு

Koviloor Digital Library



க்கு ஞானுஞ்ஞானங்களா லுண்டான சகல வியவகாரமு மாத்மாவாக விளங்கிறபடியினு லென்றறிக. (உ௰எ)

(அ-கை.) ஆத்மாவானவர்தனக் கத்தியந்த சமீபங்களாயிருக்கிற புத்தியாதிகளினுலே காணப்படுமென் றிப்படி யப்பியாசதிசையைப் பற்றினவாள் பண்ணுகிற சங்கைக்கிச் சமாதானஞ் சொல்லுகிருர்.

[சு-ம்.] பிரத்திய காத்மாவானவ ரேகராயேயிருந்து சடங்களாயு மனேகங்களாயுமிருக்கிற வாந்தர மனுேபுத்தி சித்தவகங்காரங்களையும் பாகிய தெகேந்திரிய பிராணுதிகளையு மவைகளைச்சேர்ந்தசமஸ்தவிடயங்களையும் பிரகாசிப்பிக்கிருர். ஆத்துமாவினுலே யறியப்பட்டுக்கொண்டு கேவலங் கடகுட்டியாதிகள்போலே சடசொரூபங்களாயிருக்கிற விந்திரியாதிகளினுலே கூடஸ்தாத்மாவானவ ரிவர்தா னுத்மாவென் றேகமாயிருக்கிற நிபத்தை யனேகங்களாயிருக்கிற கடாதிகளறியாததுபோல வறியப்படமாட்டார். (உ௰அ)

(அ-கை.) ஆத்மாவானவர் புத்தியாதிகளினுலே யறியப்படமாட்டாரேயாகு லந்தவாத்மாவை யறிகிறதற் கிந்தப் புத்தியாதிகளின் ஞானத்தைவிட வேறேயொரு ஞானமுண்டாகவேண்டு மப்படி வேறேயொரு ஞானமுண்டாகிறதற்கித்த வந்தக்கரணுதிகளைவிட வேறேயொரு வந்தக்கரணுதிகளையுங்காணுே மாகையால் முமுக்ஷுக்களுக்கு ஆத்மக்ஞானமெப்படியுண்டாகுமென்று சங்கித்துக்கொண் டதற்குச் சமாதானஞ்சொல்லுகிருர்.

[சு-ம்.] சடங்களாயிருக்கிற வந்தக்கரணுதிகளுக்கு ஞானத்தைக் கொடுத்துக்கொண்டு தானும் ஞானசொரூபியாய் விளங்கிற பிரத்தியகாத்மாவானவர் ஞானத்தைத்தானே சொ

Koviloor Digital Library



ரூபமாய் யுடைத்தாயிருக்கிறதினலே யவருக் கெப்போதும் நித்தியமாயிருக்கிற சொச்சொரூபக்ஞானமான தெப்போ துமிருந் துள்ளளவி லந்தக்கூடஸ்த சைதன்னியத்தை விள க்கிறதிலே யனுத்மாக்களா யிருக்கிற வந்தக்கரணுதிகளு டைய ஞாஞபேக்ஷையானது கடாதிகளை பிரகாசிப்பித்துக் கொண்டு தானும் பிரகாசித்துக்கொண்டிருக்கிற தீபத்துக் குத் தன்னைப் பிரகாசிபிக்க வன்னிய தீபாபேக்ஷை யெப்படி த்தேவையில்லேயோ வப்படி வேண்டியதில்லே.

(இ-ம்.) கிரகமத்தியி லேற்றிவைக்கப்பட்டுக் கிரகத்திலு ள்ள வஸ்துக்களுக்குப் பிரகாசத்தைக் கொடுத்துக்கொண்டு தானு மதிப்பிரகாசமாய் விளங்குகிற வொரு மகாதீபத்தை யி து தீபமென்றறிகிறதற்கு வேறேயொரு தீபாபேக்ஷை யெப்ப டித்தேவையில்லேயோ வப்படிப்போலே தேகமத்தியிலே விள ங்குகிற விருதய வாகாசத்திற் றன்னலேதானே விளங்கிக்கொ ண்டு ஸ்தூலசூக்ஷுமங்களென்கிற சரீரகாரணமான வந்தக்கா ணுதி சகலவிந்திரியங்களுக்கும் ஞானத்தைக் கொடுத்துக்கொ ண்டு தானு ஞானசொரூபியாய் விளங்குகிற வாத்மாவும் வா லிப யவ்வன கௌமார வார்த்திக ஜாக்கிர சொப்பன சுழுத்தி மரணமூர்ச்சை சுவர்க்க நரக தாஷ்ணீயம் பூதாவத்தை முதற் கொண்டு நிருவிகற்பசமாதிவரைக்குமுள்ள சதாகாலமு நித்தி யாநுபவ ரூபியானபடியினலே யவரை யிவர்தா னுத்மாவெ ன்றறிகிறதற்கு வேறேயொரு ஞாஞபேக்ஷை வேண்டிய தில்லே. (உ௰௩)

(அ-கை.) ஆத்மாவானவர் புத்தியாதி சகல விந்திரியங்க ளிணு லறியப்படமாட்டாரென்றுந் தீபத்திலுள்ள பிரகாச ம்போ லந்த வாத்மாவினிடத்திலே சொச்சொரூபக்ஞானமா

Koviloor Digital Library



னது நித்தியசித்தமா யிருக்கிறபடியினா லந்தாத்மவிடயக்ஞா
னத்துக்கு வேறொரு ஞானம் வேண்டியதில்லையென்றும் பூரு
வசுலோகங்க ளிரண்டிலேயுஞ் சொன்ன திதார்த்தமான
போதிலும்; கிருமிகீடபதங்க மநுட பசுவாதிகளா யிருக்கிற
சகல பிராணிகளிடத்திலேயுஞ் சொச்சொருபக்ஞான மிரு
ந்து மவர்களுக்கெல்லா மிவர்தா னாத்மாவென் றாத்மசொருப
பரிக்ஞானம் வாராதபடியினாற் றிருஷ்டாந்தமான தீபத்தை
யிது தீபமென்றறிகிறதற்குத் தீபாந்திரப்பிரகாச மில்லாமற்
போனாலு நேத்திரவிந்திரியப் பிரகாசாபேக்ஷை வேண்டி
யிருக்கிறபடியினாலே கேவலஞ் சொச்சொருபக்ஞானத்தினா
லேதானே யாத்மபரிக்ஞானம் வரமாட்டாது. பின்னையோ
வென்றா லது வேறொரு வுபாயத்தினாலேயே வரவேண்டு
மென்று சங்கித்துக்கொண் டதற்குச் சமாதானஞ் சொல்லுகி
றார்; யதத்துவாவிர்த்தி பூருவகமாய் தத்துவமசியாதி மஹா
வாக்கியார்த்த சென்னியமாயிருக்கிற விர்த்திக்ஞானத்தினா
லிவர்தா னாத்மாவென்கிற வாத்மசொருப பரிக்ஞானத்தி
னாலே ஜீவபரவைக்கிய சித்தியுண்டா மாகையா லிதுவே
யுபாயமென்று வெளியாய்ச் சொல்கிறார்.

[சு - ம்.] சொருபலக்ஷணையென்றுந் தடஸ்தலக்ஷணை
யென்று மதத்துவாவிர்த்திலக்ஷணையென்றும் பெயரை
யுடைத்தாயிருக்கிற விந்த மூன்றுலக்ஷணைகளினாற் சகல
சுருதிவாக்கியங்களு மாத்மாவைப் பிரதிபாதிக்கிறதுக ளதெ
ப்படியென்றாற பிரமமானது சத்தியக்ஞானாந்த சொருபமெ
ன்று சொல்லுகிற சுருதிவாக்கியமானது சொருபலக்ஷணை.
இதனாற் சத்தியக்ஞானாந்தசொருபமா யொரு பிரமமுண்டெ
ன்று சுவர்க்கத்தைப்போலே பிரமத்தைப் பரோக்ஷமாயறி

Koviloor Digital Library



யலா மிப்படி சத்தியக்ஞானாநந்தமா யொரு பிரமமுண்டெ ன்று சுருதிசொல்லுகிறதே யென்கிற பிரபல தாக்ஷண் ணியத்தினாலே யப்படி யொரு பிரமமுண்டென்று பரோ க்ஷமா யறிந்தபோதிலும்; அப்படிக்கு வுண்டோவில்லையோ வென்கிற சமுசயம் போகமாட்டா தந்தச் சமுசய பரிகா ரார்த்தமாய்த் தடஸ்தலக்ஷணையும் வேண்டியதாயிருந்த தெப் படியென்றால்? மிருத்திகையினிடத்தில் கடமானதுபோ லிவ ளவு சராசரப்பிரபஞ்சங்களு மெங்கேயிருந்துண்டாமோ வெங்கேதானிருக்குமோ வெதிலே லயத்தையடையுமோ வதுவே பிரமமென்று மிந்த வகங்காராதிப் பிரபஞ்சங்களெ ல்லா மெங்கேயிருந் துண்டாகின்றதுகளோ வவைகளெல்லா ஞ்சுயமே சடங்களாயிருந்தாலு மெதினுடைய சைதன்னியத் தைப் பற்றிக்கொண்டு சுயமே சேதனங்கள்போலே யிருக்கி ன்றதுகளோ விவளவு மெங்கே லயத்தையடையுமோ வது வே பிரமமென்று சொல்லுகிற சுருதிவாக்கியமே தடஸ்தல க்ஷணை. இதினாலே யாகாசாதிப் பிரபஞ்சத்தினுடைய சிருஷ் டி திதி பிரளயங்களுக்கு மகங்காராதி யுற்பத்தி லயப்பிரவிரு த்திகளுக்குங் காரணமாயுஞ் சாக்ஷிமாத்திரமாயு மொருவஸ்து வுண்டென்று போதம்வரு மப்படிப் போதம்வந் திருந்தபோ திலும் ஆத்மசொரூபமானது பூதபௌதிக பிரபஞ்சங்களி னாலேயு மகங்காரதி ஸ்தூலாந்தங்களினாலேயு மறையப்பட்ட துபோ லிருக்கிறபடியினாலே யந்த மறைவையு நிவிர்த்திப்பித் தாத்மாவைப் பிரத்தியக்ஷமாய் தெரிவிக்கிறதின்பொருட் டதத்துவாவிர்த்தி லக்ஷணைவேண்டியிருந்த ததெப்படியெ ன்றா லதத்துக்களென்று சொல்லப்பட்ட வனாத்மாக்களையெ ல்லா மிதுவு மாத்மாவன் றிதுவு மாத்மாவன்றென்று யிப் படி நிடேதித்துப் போட்டபிறகு மௌனமாய் முடிந்த வே

Koviloor Digital Library



தவாக்கியமே யதத்துவாவிர்த்தி லக்ஷணை. அஃதெப்படியெ ன்ருல னுத்மாக்களைமாத்திரம் நிடேதம்பண்ணுகிற வதத்துவா விர்த்தி லக்ஷணையான தெப்படி யாத்மாவை பிரதிபாதிக்கு மென்ருல் ந்த வனுத்மக்களையெல்லா மாத்மாவன்றென்று மிவைவும் மித்தையாமாத்திரமென்றும் நிடேதித்துப்போட் டுப் பிற்பா டொன்றுஞ் சொல்லாமல் முடிந்த சுருதிவாக்கிய த்திறுடைய மௌனத்தினுலே யந்த வதத்துவாவிர்த்தி யான தாத்மாவையே பிரதிபாதிக்கின்றது. இதற்குத் திருஷ் டாந்த மேப்படியென்ருல்? வீதியிலேபோகிற புருஷாளுக்கு ட்புருஷ ஞரென்று ஒரு சகியினுலே கேட்கப்பட்ட மற் ெருரு யெவ்வன்னநாயகியானவள் இவனன் றிவனன்றென் றெல்லாரையுந்தள்ளிப் பிற்பாடு தன்புருஷனைக் கண்டவுட னெப்படி மௌனமா யறிவித்தாளோ; அப்படிப்போ லதத்து வாவிர்த்திலக்ஷணையான தனுத்மாக்களை நிடேதித்துப் பிற் பாடு மௌனத்தினுலே யாத்மாவைதானே பிரதிபாதிக்கிற தா கையா லதத்துவாவிர்த்தி லக்ஷணமென்கிற பெயரை யுடை த்தாயிருக்கிற விதுவுமன் றிதுவுமன்றென்கிற நேதிநேதி வாக் கியத்திறுலே சர்வசாதன சம்பன்னனுயு மேதாவியாயும் விசாரஜ்ஞனுயு மாத்மாவை யறியவேண்டுமென்கிற விச்சை யையுடைய திவிரதர முமுக்ஷுவானவன் றேகேந்திரியாதி வத்தியாசருபமாயிருக்கிற பிரமைக் கதிஷ்டானமாகிய கூடஸ் தாத்மாவினிடத்திலே ஜீவனென்கிற வியவகாரத்துக் கேதுக்க ளாயிருக்கிற வியட்டி ஸ்தூல சூக்ஷும காரண சரீரங்களென் ன சர்வாதிஷ்டானப் பிரமத்தினிடத்தி லீசுரனென்கிற வியவ காரத்துக் கேதுக்களாயிருக்கிற சமட்டிஸ்தூலசூக்ஷுமகாரண சரீரங்களென்ன, வினைகளுடைய சங்கோசவிகாசங்களென் ன, சர்வக்ஞத்துவ கிஞ்சிக்ஞத்துவாதிகளாயிருக்கிற குணதார

Koviloor Digital Library



தன்மியங்களுக்கு முக்கிய வேதுக்களாகிய மாயையவித்தை யாதிகளான் வுபாதிகளென்ன ஆகிய யெல்லாவற்றையுந்த ள்ளி இவ்வளவு மதிஷ்டானத்தினிடத்தி லாரோபிதமான படி யினாலேயும் வந்தியாபுத்திர சசவிஷாண ககனாரவிந்தங்கள் போலே காலத்திரயத்திலேயுங் கேவலம் மித்தையாமாத்திர மானபடியினாலேயு மிவைகளொன்று மாத்மாவன்றென்று நிடேதித்துப்போட்டுப் பிற்பாடு தத்துவமசியாதி மஹாவாக் கியங்களினாலே ஜீவாதிஷ்டான சைதன்னியமான ஜீவாத்மா வென்ன, ஈசுராதிஷ்டான சைதன்னியமான பரமாத்மாவென் ன. இந்த விரண்டு சைதன்னியங்களுடைய நித்தியசித்தமான ஏகபாவத்தை யடைகுவன். அஃதெப்படியென்றாற் றத்துவ மசியென்கிற சுருதிவாக்கியத்தினாலே வாக்கியார்த்தத்தைப் பற்றி ஐக்கியஞ்சொல்லுவோமென்றால்? வாக்கியர்த்தத்தை விசாரிக்கும்போது ராசாவுக்கு மடிமைக்கு மஹாமேருவுக்கு மணுவுக்குஞ் சூரியனுக்கும் மின்மினிக்கும்போலே ஜீவீசுரா ளிரண்டுபேருக்குஞ் சர்வக்ஞத்துவாதி கிஞ்சிக்ஞத்துவாதி குணவைசம்மியத்தினால் வெகுபேத மிருக்கிறபடியினாலே யது கூடாது. பின்னை யெப்படியென்றால்! லக்ஷணையை ப்பற்றியே யவர்களுக் கைக்கியஞ்சொல்லவேண்டு மானால் லக்ஷணைதா னெத்தனைவிதமென்றால்? ஜகரலக்ஷணையென் றும், அஜகரலக்ஷணையென்றும், ஜகதஜகரலக்ஷணையென்று ம், திரிவிதமுண்டு. இதில் விட்ட லக்ஷணைக் குதாரண மேதென்றால்? கங்காயாங்கோஷப் பிரதிவசதியென்கிற வாக் கியமே யுதாரணம். இதன் வாக்கியார்த்த மெப்படியென்றால்? கங்காப்பிரவாகத்திலே யிடையர்தெருவிருக்கிற தென்கிறது பிரத்தியக்ஷ விரோதமானபடியினாலே கங்காபதத்துக்கு வா க்கியார்த்தமாயிருக்கிற பிரவாகத்தை யத்தியந்தம் விட்டுப்போ

Koviloor Digital Library



ட்டுத் தீரத்தை லக்ஷணையினாலே யங்கீகரித்துக் கங்காதீர்த்தத்திலே யிடையர்தெரு விருக்கிறதென்று சொன்னு லொருவிரோதமுமில்லை. அப்படிப்போல மனோப்பிரமமென்கிற வாக்கியத்துக்கு வாக்கியார்த்தமான விகாரமனதுக் காத்மத்துவங் கூடாதபடியினாலே மனோவிலக்ஷணம் பிரமமென்றுசொன்னு லொருவிரோதமு மில்லை. ஆனபடியா லிந்த விட்டலக்ஷணையானது தத்துவவாக்கியத்துக் குபயோகமில்லை. ஏனென்றால்? விட்டலக்ஷணையிலே வாக்கியார்த்தமான யாவதம்சத்தையும், விடவேண்டியதிருப்பதனாலேயும், யாவதம்சத்தையும்விட்டா லக்கியஞ் சொல்லுகிறதற் கிடமில்லாதபடியினாலேயும், உபயோகமாகமாட்டாது. விடாத லக்ஷணைக் குதாரணமேதென்றால்? சோணோதாவதியென்கிற வாக்கியம். இந்த வாக்கியார்த்த மெப்படியென்றால்? சிவப்பானதோடு தென்பது. அசேதனமான சிவப்போடு தென்ப தத்தியர்த்தம் விரோதமானபடியினாலே? சிவப்பையும் விடாமற் சிவப்பாயிருக்கிற வொரு குதிரையைக்கூட லக்ஷணையினாலங்கீகரித்துக்கொண்டு சிவப்புக்குதிரை யோடுகிறதென்று சொன்னு லொருவிரோதமுமில்லை. அப்படிப்போலே சத்தியக்ஞானானந்தமென்கிற வாக்கியத்துக்கு; சத்தியாதி பதங்களுக்குமாத்திரம் பிரமத்துவங் கூடாதபடியினாலே சத்தியாதி பதங்களையும் விடாமற் பிரமத்தையும் லக்ஷணையினாலே யங்கீகரித்துக்கொண்டு சத்தியக்ஞானானந்தம் பிரமசொருபமென்றுசொன்னு லொரு விரோதமுமில்லை. ஆனபடியினா லிந்த விடாதலட்சணையானது தத்துவமசிவாக்கியத்துக் குபயோகமாகமாட்டா தேனென்றா லந்த வாக்கியார்த்தத்தி விருவிதவம்சத்தையும் விடப்படாதபடியினாலேயும், விரோதாம்சத்தைவிடாம லக்கியங் கூடாதபடியினாலேயு முபயோகமாக

Koviloor Digital Library



மாட்டாது. விட்டுவிடாதலக்ஷணைக் குதாரண மேதென்றால்? சோயந்தேவதத்தகாவென்கிற வாக்கியம். இந்த வாக்கியார்த்த மெப்படியென்றால்? காசிப்பட்டணத்தி லியாதொரு தேவதத்தன் காணப்பட்டானோ வந்தத் தேவதத்தனானவன் யிவனென்கிற திப்படிச் சொல்லப்பட்ட வர்த்தத்தி லந்தத்தேசமந்தக்கால மந்தரூப மந்தவவத்தைகள் முதலானதுகளுக்கு மிந்தத்தேச மிந்தக்கால மிந்தரூப மிந்தவவத்தைகள் முதலானதுகளுக்கும் வெகுவிரோத மிருக்கிறபடியினாலே வாக்கியார்த்தத்தி லேகதேசாம்சங்களான வந்தத்தேச மந்தக்காலாதிகளையு மிந்தத்தேச மிந்தக்காலாதிகளையும் விட்டுப்போட்டு வாக்கியார்த்தத்தில் முக்கியாம்சமாயிருக்கிற தேவதத்தனுடைய சரீரபிண்டத்தைமாத்திரம் லக்ஷணையினா லங்கீகரித்துக்கொண் டந்தத் தேவதத்தனே யிவனென்றுசொன்னா லொரு விரோதமு மில்லை. அப்படிப்போலே தத்துவமசியென்கிற வாக்கியத்தி லிருக்கிற தற்பதத்திற்கும், துவம்பதத்துக்கும், வாக்கியார்த்தத்தை விசாரித்து வதிற் றள்ளத்தக்க விரோதாம்சத்தை தள்ளிப் பிற்பா டவிருத்தமாயிருக்கிற முக்கியாம்சத்தை லக்ஷணையினா லங்கீகரித்துக்கொண் டைக்கியஞ்சொல்லவேண்டு மஃதெப்படியென் றா லவித்தையோபாதிகனாயுங் கர்த்திருத்துவ போக்திருத்துவாதி யபிமானியாயுங் கிஞ்சிக்ஞனாயுமிருக்கிற நீயானவன் மாயோபாதிகனாயுஞ் சர்வக்ஞத்துவ சர்வேசுரத்துவ சர்வாந்திரியாமித்துவாதிகளான வனந்த கல்யாணகுண பரிபூரணனாயுமிருக்கிற வந்த வீசுவரனாக வாகிறா யென்கிறதே வாக்கியார்த்த மிந்த வாக்கியார்த்தத்திற் றொம்பத வாச்சியனாயிருக்கிற ஜீவனுக்குந் தற்பத வாச்சியனாயிருக்கிற ஈசுரனுக்குஞ் சர்வக்ஞத்துவ கிஞ்சிக்ஞத்துவாதிகளாயிருக்கிற குணதாரதன்மியத்தினாலே வெகுவி

Koviloor Digital Library



ரோதமிருக்கிறபடியால் வாக்கியார்த்தத்தில் விருத்தங்களாயு மேகதேசாம்சங்களாயுமிருக்கிற வவித்தையு மவித்தையாகாரி யங்களையு மந்த வவித்தையா கற்பிதங்களான கிஞ்சிக்ஞத்து வாதி குணங்களையு மாயையு மாயாகாரியமான குணங்களையு மந்த மாயாகற்பிதங்களான சர்வக்ஞத்துவாதி குணங்களை யம் விட்டுப்போட்டு வாக்கியார்த்தத்திலே முக்கியாம்சங்களா யிருக்கிற வவித்தையா வதிஷ்டானமான கூடஸ்த சைதன் னியத்தையும் மாயாவதிஷ்டானமான பிரமசைதன்னியத்தை யும், லக்ஷணையினு லங்கீகரித்துக்கொண்டு நீ யதாகவாகிறு யென்றுசொன்ன லொரு விரோதமுமில்லை, இந்த விட்டுவி டாத லக்ஷணையே தத்துவமசிவாக்கியார்த்தத்துக் குபயோக மெதிறுலென்று லிந்த விட்டுவிடாத லக்ஷணையிலே விருத்த மான யேகதேசாம்சத்தைமாத்திரந் தள்ளினு லவிருத்தமான முக்கியாம்சங்களுக் கைக்கங்கூடு மாகையினு லிந்த லக்ஷணை யே யுபயோகம். இந்த விட்டுவிடாத லக்ஷணையாகிய பாகத்தி யாக லக்ஷணையினுற் சோதித்தறியப்பட்டிருக்கிற தத்துவமசி யாதி மஹாவாக்கியங்களினுலே யாத்மபரிக்ஞான பூருவக மாய் ஜீவபரயைக்கிய சித்தியுண்டாகிறபடியினு லாத்மாவுக் கண்டார்த்தஞ் சித்திக்கிற இதி விதுவே யுபாயமென்று சொ ல்லப்படும். (௩௰)

(அ-கா.) ஆத்மாவைப் பிரித்தறியில் ஞானத்துக் கதத்து வாவிர்த்தியன்றியிலேபோனு லென்ன வாணியென்று சங்கித் துக்கொண் டாரோபிதமான சர்ப்பத்தைத் நிரவிசாரித் திது சர்ப்பமன்றென்று தள்ளாதேபோனுல் யதார்த்தக்ஞான மெ ப்படிப் பிறக்கமாட்டாதோ வப்படிப்போலே யதத்துவா விர்த்தி லக்ஷணையினுலே யனுத்மாக்களை நிடேதித்துத் தன்

Koviloor Digital Library



ளாமற் போனு லாத்மா விவரென்கிற பரிக்ஞானம் பிறக்க மாட்டாதென்று சமாதானஞ்சொல்லுகிருர்.

[சு-ம்.] அவித்தையாகற்பிதமாயுஞ் சடசபாவமாயுமிருக்கிற சரீராதிக ணீர்க்குமிழிகள்போல் நாசத்தை யுடைத்தானதுகளாகையா லீதொன்று நானன்று பின்னேயோவென்ருல்? நான் சர்வகிரிசியத்துக்கும் விலக்ஷணமாயிருக்கிற பரப்பிரமமென்று விவேகியான மஹாபுருஷனறிவன்.

(இ-ம்.) அவித்தையாகற்பிதங்களாயுங் கிரிசியங்களாயுமிருக்கிற தேகாதியானதுக ணீர்க்குமிழிபோல் நாசத்தையுடையயதுக ளகம்பதார்த்த சொரூபியாயிருக்கிற நா னிவைகளுக்கெல்லாம் விலக்ஷணமாயுஞ் சாக்ஷிமாத்திரமாயு நின்மலமாயும் நிருபாதிகமாயுஞ் சச்சிதானந்தகனமாயுமிருக்கிற பிரமமென்றறிந்து கிருதகிருத்தியனுகுவன். (௩௰௧)

(அ-கை.) இப்படி முன்சொன்னபிரகார மத்துவிதானந்தசொரூபியாயிருக்கிற வாத்மாவை மஹாவாக்கியார்த்தக்ஞானத்தினுலே யபரோக்ஷமாயறிந்து பிற்பா டந்த வநுபவத்தைத்தானே சதாவநுபவிக்கிறதி னிமித்த மாத்மாவினிடத்திலேதானே யைக்கியமுண்டாகிற பிரகாரத்தை யைந்துசுலோகங்களினுலே சொல்லுகிருர்.

[சு-ம்.] பஞ்சபூதபௌதிகமான ஸ்தூலதேகத்துக் கன்னியமாகுகையினுலே யெனக்கு ஜன்மசரை கிருசபாவ மலமாதிகளுமில்லை. இப்படியே ஞானேந்திரிய கருமேந்திரிய பிராணுதிகளென்ன சத்தாதிவிடயங்களென்ன யிவைகளுடைய சம்பந்தமு மெனக்கில்லை.

(இ-ம்.) ஜன்மமாவது? சுக்கிலசுரோணித விகாரமாய் பையிலேகட்டுப்பட்டுப் பத்துமாசவரைக்கும் மாதாவினுடைய

Koviloor Digital Library



ஷதரத்திற் குடியிருந்து பிரசவகாலவேளையில் மாதாவினு டைய யோனிரந்தரத்திற் பிரசவவேதனையுண்டாகிறபோது வெகுநேரம்வரைக்கு மிருந்தவிடத்திலிருக்காமல் வயிற்றிலே மறிந்துமறிந்து சுற்றிவந்து பிரசவகாலத்தி லுண்டாகின்ற வியாபகவாயுவினாலே விகசிதமான யோனிரந்திரமார்க்கமாய் ஸ்தூலசரீரமானது ஜீவகலாசம்பந்தத்தோடே யதோமுகமாய்ப் பூமியிலேவிழுகிறது. சரையாவது? மீசை தாடி புருவங் கூட நரைத்துப்போய் நரம்புகளுடைய சந்திபந்தங்களும்விட்டுப்போய்த் தந்தவினைமாய் கண்ணுந்தெரியாமற் காதுங் கேளாமற் கோழையுமிருமலுங் கோபதாபமுமேலிட்டுக் குண விபரீதத்துடனே ஸ்தூலசரீரமானது கோல்பிடித்துக்கொண்டு மனோன்முகமாய் நடந்துவருகிறது. கிரிசபாவமாவது? வியாதியினாலேயு மனோவிசனத்தினாலேயுஞ் சரீரமானது வாடுகிறது. லயமாவது? பிராணனீங்கிப் பிரேதமாகித் தகனகனனஞ் செந்துபக்ஷணாதிகளினாலே ஸ்தூலசரீரத்துக்கு நாசம் வருகிறது.

(உ-ம்.) கிரியமாயுஞ் சடசுபாவமாயுமிருக்கிற ஸ்தூலசரீரத்துக் கன்னியனாகையினால் ஜன்மசராதிக ளெனக்கொன்றுமில்லை. அப்படியே யிந்திரியங்களுடைய சம்பந்தமுமில்லை. சத்தாதிவிடங்களுடைய சம்பந்தமுமில்லை. (௬௰உ)

(அ-கை.) அந்தரிந்திரிய வியாபாரசம்பந்தமு மாத்மாவுக் கில்லையென்றுசொல்லுகிறார்.

[சு-ம்.] நான் மனதன்றியிலே யிருக்கிறபடியினாலே சோம்பனித்திரை பயமுதலான தாமதவிகாரமும், பெண்விடயமாய் விகற்பித்துவருகிற சித்தவிர்த்தியாகிய ராகம் வைராகிய துவேசமுதலான ராசதவிகாரமும், சிரத்தை பக்தி

Koviloor Digital Library



தியான மியோகஞ் சமை தமைமுதலான சாத்திகவிகாரமு மெனக்கில்லை. இப்படிச் சரீரவிந்திரிய பிராணமனதுக ளொன்றுமில்லாதபோ தந்த வாத்மாமாத்திரம் வஸ்துவென்றறி லென்னபிராமாணமென்ற லப்பிராணனென்றும், அம்மன னென்றும், நின்மலனென்றுஞ் சொல்லுகிற சுருதியேபிரமாணம். (௩௰௩)

(அ-கை.) முந்தின விரண்டு சுலோகத்தினாலே யனாத்ம சொரூபத்தைத் தெரிவித்துக் குருப்பிரசாத சம்பன்னனாயிருகிறவனுக் கனாத்மாவுக் கவதியாயிருக்கிற சுவாநுபவார்த்தத்தை மற்ற மூன்று சுலோகங்களினாலே சொல்லுகிறார்.

(சு-ம்.) அகங்காராதிப் பிரபஞ்சங்களுக்கெல்லாஞ் சாக்ஷியாயிருக்கின்ற நான் புத்திவாசனையாகிய முக்குணசம்பந்தமில்லாதபடியா னிர்க்குணன். நிரிந்திரியனாகிய நான் இந்திரியசென்னிய வியாபாரமாகிய கிரியை இல்லாதவனானதா னிஷ்கிரியன். நிரவயவனாகிய நான் கரசரணாதி யவயவங்கள்போல் நசியாதிருத்தலா னித்தியன். உற்பத்தி நாசமாகிய விகற்பரகிதனானகையா னானிருவிகற்பன். மனோவியாபாரமென்கிறதே யஞ்சனமானபடியினால் மனதேயில்லாமலிருக்கிற வென்னிடத்தி லந்த மனோவியாபார ரூபமான வஞ்சனமேயில்லையாகையா னிரஞ்சனன். சங்கத்தையுடைத்தான வஸ்துகளுக்கே விகாரமுண்டாகிறபடியா லசங்கனான வென்னிடத்தில் விகாரமேயில்லை யாகையால் நிருவிகாரன். பதினேழிந்திரிய சொரூபமான லிங்கசரீரமே யாகாரமானபடியினாலந்த லிங்கசரீரோபாதி வற்சிதனாயிருக்கிற வென்னிடத்திலந்த லிங்கசரீர ரூபமான வாகாரமேயில்லை யாகையா னானிராகாரன். அவித்தையா வித்தையாகாரியங்களிலே பற்

Koviloor Digital Library



தமோக்ஷங்களானதா லந்த வவித்தையாவித்தைகளு மவை களின் காரியங்களு மில்லாமலிருக்கிற வென்னிடத்தி லந்த வவித்தையாவித்தையா காரியங்களான பந்த மோக்ஷ ங்களேயில்லை யாகையா னான் காலத்திரயத்திலேயும் விடு பட்ட நித்திய முத்தன். அன்னியோன்னிய சம்பந்தமுள்ள வஸ்துக்களுக்கே கூட்டுறவினாலே மலமானதுண்டாகிறப டியா லொன்றோடுங் கூடாமலிருக்கிற வென்னிடத்தில் மலமேயில்லை யாகையா னானிருமலன். இந்தப்பிரகாரஞ் சா ர்வகாலமும் நா னிப்போது சொன்ன நிர்க்குணாதி சொருப மாக வாகியிருக்கிறேனென் றநுபவித்தறியவேண்டும். (௬௰௪)

(அ-கை.) பூருவஞ் சொல்லப்பட்ட யேதுப்பிரமாணாதிக ளினாலே தன்னுடைய சொருபமான திப்படியென் றறியப் பட்டு தானபோதிலும் மப்படியறியப்பட்ட வநுபதத்தைத் திடப்படுத்துகிற நிமித்தம் பின்னையு மந்த வநுபவத்தைத் தானே திருஷ்டாந்த பூருவகமா யின்னபடியென்று காண்பிக் கிறார்.

[கு-ம்.] முன்சொன்ன யேதுப்பிரமாணாதிகளினா னித்தி யவநுபவசித்தனா யகம்பாதார்த்த சொருபியாயிருக்கிற நான்; ஆகாசமானது கடமடகுட்டியகுகுல் கோபுராதிகளான வ னேகவுபாதிகளிலெல்லா முள்ளும் வெளியு மேகருபமாய் வி யாபித்துக்கொண் டந்த கடாதிகளெல்லா நசித்தாலுந் தான சியாமற் சுத்தமா யசங்கமாய் நின்மலமாய்ச் சலனரகிதமா யிருத்தல்போ லகங்காராதித் திரிசியப் பிரபஞ்சங்களி னுள் ளிலும் வெளியிலும் வியாபித்திருத்தலாற் சர்வ கெதனாயு காசரகிதனாயு மிருத்தலா லச்சுதனாயு முயர்வுதாழ்வு நீளங் குறு கலின்றியிற் சர்வத்திலுஞ் சமமாய் வியாபித்திருத்தலாற் சர்வ

Koviloor Digital Library



சமனுயு மப்படிச் சர்வத்திரவியாபித்திருத்தலால் நிர்லேபமா கியு மச்சுதனுயுஞ் சங்கரகிதனுனதா னிற்சங்கனுயும் மலமில் லாதவனுதலா னிருமலனுயு மிப்படிப் பரிபூரணனுயிருக்கிற வெனக்குச் சலனமேயில்லாதபடியா லசலனுயுஞ் சதாவிளங் கிக்கொண்டிருக்கிறேன். (கூடு)

(அ-நை.) பூருவசுலோகத்தினுலே சொல்லப்பட்ட வப ரோக்ஷாநுபவ கிடத்தை வெளியாய்க்காண்பிக்கிமுா.

[சு-ம்.] காலத்திர யாபாத்தியமாதலா னித்தியமாயு முட ல்போல மலசம்பந்த மற்றிருத்தலாற் சுத்தமாயும், போதவடி வாதலால் புத்தமாயும், ஸஜாதிய விஸாதிய ஸ்வகதபேத சூ ன்யமாதலா லேகமாயுந் துவித மில்லாததா லத்துவிதமாயும், பரிச்சின்னமில்லாத சுகசொரூபமாதலா லகண்டானந்தமாயு ம், சத்தியக்ஞானுனந்தம் பிரமமென்கிறதைத் தெரியச் சுருதி வாக்கியத்தினுலே பிரதிபாதிக்கப்பட்டதாயு மிருக்கிற பரப்பி ரமமானது நான்முனென் றிப்படித் தன்னுடைய சொரூபசு பாவத்தை யறிந்து சதாமனனம் பண்ணவேண்டும். (கூசு)

(அ-நை.) பூருவசுலோகத்திற் சொன்ன மனனமானது வெகுகால மப்பியாசிக்கிறபோ ததுதானே பரமபுருஷார்த்த த்தைச் சாதிப்பிக்குமென்று சொல்லுகிமுர்.

[சு-ம்.] நிரந்தரந் தைலதாரையைப்போற் செய்யப்பட் ட நான் பிரமமாயிருக்கிறேனென்கிற வகம்பிரம்மாஸ்மியா கிய சத்துவாசனையானது; அந்தக்கரண கற்பிதங்களான கர் த்தாக்ம் போக்தாகஞ் சாதோகம் நஷ்டோகஞ் சிஷ்டோகம் பி ரஷ்டோகங் கஷ்டோகந் துஷ்டோக மென்கிற விதமுதலா ன வசுத்தவாசனையாகிய துக்க பரம்பரைகளை யவுடதமான

Koviloor Digital Library



ற ரோகங்களை வெகுகாலாப்பியாசத்தா லெப்படிக்கெடுக் குமோ வப்படிக்கெடுக்கும். (கூ௰எ)

(அ-கை.) பிரமானுசந்தான விடயத்திலுள்ள சாதனநியம த்தைச் சொல்லுகிறார்.

[சு-ம்.] ஜனமுதலான பாதையன்றியிலிருக்கிற சுத்தமா ன விடத்தில் மிருதுகம்பளாதி யாசனத்திலிருந் திகபர சுக விச்சையில்லாதவனுயு மந்தந்தக் கோளகங்களி னிறுத்தப்பட் ட சிதேந்திரியனுயு மனாத்மவிடயங்களிலே புத்தியை விடா தவனுயு மிருக்கிற தீவிரதரமுமூக்ஷுவான மஹாபுருஷன் யேகரசரான நித்தியமுக்த சுத்தபுத்த பரிபூரணனந்த சொரூப மாயிருக்கிற பரமாத்மாவே நானென்று தியானம்பண்ணு வன். (கூ௰அ)

(அ-கை.) திரிசியப் பிரபஞ்சகாரணமான சாக்கிரத்தி லேகத்துவபாவனையான தெப்படிக்கூடுமென்று சங்கித்துக் கொண் டதற்குச் சமாதானஞ்சொல்லுகிறார்.

[சு-ம்.] பிரமசொரூபத்தைப் பிரித்தறியிற் சோபனமான புத்தியை யுடைத்தான வப்பியாசியானவ னாத்மாவினிட த்திலே கற்பிதங்களாயிருக்கிற சகல பிரபஞ்சத்தையு மாத்மா வினிடத்திற் பிறவிலாபித்த லென்பதாகிய வத்தியந்த லயஞ் செய்து போட்டதின்பின்பு பூரணசந்திரோதயத்தின் நில வோடேக் கூடிவிளங்குகிற வாகாசம்போற் பிரகாசிக்கிற பர மாத்மாவே நானென்று தியானிப்பன். (கூ௰கூ)

அ-கை.) பரமார்த்திக விக்ஞானியானவ னுமரூபங்களை யொன்றுங்கிரகியாமற் சதாபரிபூரணமாயிருக்கிற சிதானந்தப் பிரமசைதன்னியமாகவே யிருப்பனென்று சொல்லுகிறார்.

Koviloor Digital Library



[சூ-ம்.] பரப்பிரமசொரூபத்தை யறிந்திருக்கிற மஹாத்மாவானவ னுமரூபப் பிரபஞ்சங்களை மித்தையென்று விட்டுப் போட்டுத் தேசகாலவஸ்து பரிச்சேதமின்றியிருக்கிற பரிபூரணமாயுஞ் சின்மயமாயிருக்கிற சித்தாயும் பரமப்பிரீதிவிடயமாயிருக்கிற வானந்தமாயுமிரானின்ற சொரூபமாகவேயிருக்கிறான். (சம)

(அ-கை.) ஞாதுருக்ஞானஞேயமென்கிற திரிபுடிக்ஞானமுண்டாயிருக்கும்போ தேகத்துவபாவனையான தெப்படிக் கூடுமென்று சங்கித்துக்கொண் டதற்குச் சமாதானஞ்சொல்லுகிறார்.

[சூ-ம்.] அறிகிறவனும் விர்த்திக்ஞானமாயு மறியப்பட்ட விடயங்களாயுமிருக்கிற திரிபுடிகளுடைய பேதப்பிரதீதியானது மாயாவவித்தையா காரியங்களுக் கன்னியரான வாத்மாவினிடத்திலில்லை. பின்னையோவென்றால்? மாயாவவித்தையா கற்பிதங்களான ஜீவீசுராளிடத்திலேயிருக்கிறது. ஆனா லாத்மாவெப்படிவிளங்குகிறாரென்றாற் சிதானந்தவேகசொரூபியாய்த் தான்றானே விளங்குகிறார்.

(இ-ம்.) மாயாவவித்தையாவிலக்ஷணமாயிருக்கிற சுத்தசைதன்னியத்திலே ஞாதுருமுதலான பேதங்களொன்றுமில்லை கேவலஞ் சச்சிதானந்தசொரூபியானபடியினு லாபாசங்களொன்றோடுஞ் சேராமற் றானேவிளங்குகிறார். (சமக)

(அ-கை.) இப்படிப்பட்ட சுத்தசைதன்னியவஸ்துவைத் தியானம்பண்ணுகிறவனுக்குப் பிரத்தியக்ஷபலத்தைச் சொல்லுகிறார்.

[சூ-ம்.] அந்தக்கரணமாகிற அரணிக்கட்டையிலே மனனமாகிற மேலரணியைவைத்துச் சொரூபத்தியானமாகிற மத

Koviloor Digital Library



வியாபாரத்தைச் சர்வகாலமுஞ்செய்யும்போ துண்டாகா நின்ற பிரமாபரோக்ஷ சாக்ஷாத்காரரூபமாகிய வகண்டாகார விர்த்திக்ஞானமாகிற வக்கினிச் சுவாலையானது வாவரணவி க்ஷேபாதிப் பரிவாரங்களோடேகூடிச் சொற்சொருபத்தை யறியவொட்டாமல் மறைத்துக்கொண்டிருக்கிற மூலாக்ஞா னமாகிற விந்தனத்தைத் தகிக்கு மிப்படி யஞ்ஞான மதன்பரி வாரத்தோடும் பஸ்பமானவுட னிந்த முமுக்ஷுவானவ னாத் மசாம்பிராச்சிய சிம்மாசனத்திலே பட்டாபிஷேகம்பண்ணப் பட்டுக் கிருதகிருத்தியனாக விருப்பன். (௪௰௨)

(அ-நா.) ஜீவபரவைக்கியக்ஞானத்தினாலே யவித்தை யாகப்பிரமான தமசானது நிஷ்ஷேஷமாய் நிவர்த்தியானவு டனே பரமாத்மாவானவர் தான்றானேவிளங்குவ ரென்று சொல்லுகிறார்.

[சு-ம்.] அர்னோதயத்தினா லந்தகாரநிவிர்த்தியானவுட னெல்லாருடைய நேத்திரவிந்திரியத்துக்கும் விடயமா யாகி த்த ரெப்படியுதிப்பரோ வப்படி யனாதி யவித்தையா மய மான தமசானது பிரமாபரோக்ஷக்ஞானத்தினா னிஷ்ஷேஷ மாய் நசித்தவுட னாத்மாவானவர் சுத்தவிர்த்திக்கு விடமாயி ருப்பர். (௪௰௩)

(அ-நா.) ஆத்மாவானவர் சர்வகாலமு மபரோக்ஷசொரு பியானபடியினாலே வாலம்பித்தவராகவேயிருக்கிறா ரப்படி யிருக்க விப்போ தெனக்கு லபித்தாரென்கிற தெதினாலெ ன்று சங்கித்துக்கொண் டதற்குச் சமாதானஞ்சொல்லுகிறார்.

[சு-ம்.] அகங்காராதி சர்வகிரியைத்துக்குஞ் சாக்ஷியாயி ருக்கிற வாத்மாவானவர் வாலிப யெவ்வன கௌமார வார்த் திக ஜாக்கிர சொப்பன சுழுத்தி மரணமூர்ச்சை தாவ்டினிய

Koviloor Digital Library



பாவஞ் சுவர்க்க நரக மிவைகள்முதலான சர்வகாலமு மடையப்பட்டிருக்கத் தேகேந்திரியாதி யத்தியாசரூபமான வவித்தையினுலே யடையப்படாதவர்போலே விளங்குகிருர்.

அப்படி வெகுகாலமடையப்படாதவர்போற் ரேருணினுலும் வெகுகாலம் நிரந்தரமாய்ப் பண்ணப்பட்டிருக்கிற சிரவண மனன நிதித்தியாசன சென்னியமான பிரமாபரோக்ஷக் ஞானத்தினுலே யந்த வவித்தைக்கு நாசம்வரும்போ தடையப்பட்டவர்போல் விளங்குகிருர்.

அடையப்பட்டவராக விளங்குகிருரென்று சொல்லாமலடையப்பட்டவர் போலே விளங்குகிருரென்று சொல்வதென்னெனிற் றன்னுலெண்ணி யறியப்பட்ட வொன்பதுபேரைவிடப் புறம்பாயிருக்கிற தன்னை பத்தாவானென் றறியாமலவிவேகத்தினுலே தன்னைத்தான் பறிகொடுத்தவன்போற் பிரமிக்கிற தசமனைப்போற் றன்னுலறியப்பட்ட தொண்ணூற்ருறு தத்துவங்களோடே கூடாமலிருக்கிற தன்னைத் தொண்ணூற்றேழா மவனுகப் பிரித்தறியாமற்போன வவித்தையாப் பிரமையினுற் றன்னைப் பறிகொடுத்தவன்போற் பிரமிக்கிருன்; பிற்பாடு விவேகத்தினுற் றன்னைத்தா னடைகிருனிந்த வவித்தையா நிவிர்த்தியே விவேகமானபடியினு லிந்த விவேகமு மவித்தையா காரியமே யல்லாமல் வேறில்லை கேவலம் பரமார்த்திக திசையி லாத்மாவானவ ரடையப்பட்டவராகவே யிருக்கிறபடியினுலேயு மிப்போ தடைந்தேனென்று சொல்ல விடமில்லாததினுலேயு மந்த நித்தியப் பிராப்தரான வாத்மா வடையப்பட்டவர்போல விளங்குகிருரென்று சொன்னதே சரி. இதற்கு திருஷ்டாந்த மெப்படியென்ருல்? நகையைக் கழத்தி வைத்துப்போட்டு நீராடின வொருபெண்

Koviloor Digital Library



ளொரு வாபரணத்தை கண்டத்திற் றரித்தவுடன் சகிவந்து சோரநாயகன் சரித்திரஞ் சொல்வதைக்கேட்டு மகிழ்ந்து பிர மித்தநின்பேரில் நகையைக் காணுமென் றவள்தேடச் சகி கண்டத்தி லிருக்கிறதென்று சொல்லக் கண்டதுபோல நித்தியப்பிராப்தரான வாத்மாவு மக்ஞானத்தினலே வப்பி ராப்தர்போலேயு மந்த வக்ஞானநாசத்திற் பிராப்தர்போலே யும் விளங்குகிறார். (௩௰௪)

(அ-கை.) ஆனல் ஜீவனுக்குப் பரமாத்மாவோ டேகத் வமானது கூடாதென்றே தோணுகிற தெதினலென்று லவ னுக்கு ஜீவத்தவ ரூபமான விரோதமிருக்கிறபடியினலேயும் லோகத்திலே சுபாவகுணத்துக்குப் பரிகாரமே யில்லாததின லேயு மென்று சங்கித்துக்கொண் டதற்குச் சமாதானஞ்சொல் லுகிறார்.

[சு-ம்.] ஸ்தாணுவிலே புருஷன்போலப் பிரமத்தினிடத் தில் ஜீவத்துமான தஞ்ஞானத்தினற் கற்பிக்கப்பட்டு இந்த ஜீவனுடைய நிசசொருபத்தை விசாரிக்கும்போ தத்தியந்த மில்லாமற்போகிறான்.

(இ-ம்.) மஹாந்த காரத்திலிருக்கிற கட்டையி லிவன் கள் ளனு யிருக்கிறனென்று விருதாவி லெப்படி கற்பிக்கப்படு கிறதோ வப்படி விசாரமில்லாத வவிவேகப் பிராந்தியினலே பிரமத்தினிடத்தில் ஜீவத்துவமானது வியர்த்தமாய் கற்பிக் கப்படுகிறது வேதாந்தசாஸ்திர வுபதேச சென்னியமாயிரு க்கிற விவேக திருஷ்டியினு லந்த ஜீவனுக்கு நிசசொருப மாயிருக்கிற தற்பத லக்ஷியார்த்தமானது தானே தானுகி றபோது ஜீவத்துவமானது கற்பிதமானதா னிஷ்சேஷமாய் ந்ிவிர்த்தி யடைகிறது நிவிர்த்தியானவுடனே சதாப்பிரமமாக

Koviloor Digital Library



வே யிருக்கிறேனென்று திடநிச்சய பூருவகமாக வைக்கியத்தை அடைவன். (௪௰௫)

(அ-கை.) நானெனவிதுவென்று தோணப்பட்ட ஜாக்கிரத்திலேதானே நானென விதுவென்கிற வக்ஞானமில்லாமற் போமோவென்று சங்கித்துக்கொண் டதற்குச் சமாதானஞ் சொல்லுகிறார்.

[சு-ம்.] எதார்த்தமா யிருக்கிற ஜீவபரவைக்கிய வநுபவத்திலிருந்து முண்டான போதமானது நானெனவிது வென்று விளங்கிற வக்ஞானத்தை யிருட்டினாற் பாதை தவறித் திக்குப்பிரமையோடுங் கூடினவனுக்குச் சூரியோதயத்தாற் றிக்குபிரமை நீங்கி யெப்படி நல்லவழி தோணுமோ வப்படி நிமிஷத்திலே தொம்சம் பண்ணிப்போட்டு நிசசொரூப வநுபவமார்க்கத்திலே கொண்டுவந்துவிடும். (௪௰௬)

(அ-கை.) இப்படிப்பட்ட மஹாபுருஷனானவன் ஞானதிருஷ்டியினாலே சகல திரிசியங்களையுஞ் சுவாத்மாவாகத் தானே பார்ப்பனென்று சொல்லுகிறார்.

[சு-ம்.] அபரோக்ஷ விக்ஞானசாலியாயிருக்கிற யோகியானவன் ஞானதிருஷ்டியினாலே கூடஸ்தரிடத்தி லஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்ட சகல திரிசியப்பிரபஞ்சங்களையு மத்துவிதியராயிருக்கிற வாத்மாமாத்திரமாக வணுவாகினுஞ் சமுசயப்படாமல் நன்றாயறிவன். (௪௰௭)

(அ-கை.) நானாப்பிரகாரமாயிருக்கிற யிவ்வளவு திரிசியப்பிரபஞ்சங்களையு மாத்மாவினிடத்தி லெப்படி யபேதமாய்ப் பார்ப்பனென்று சங்கித்துக்கொண் டதற்குச் சமாதானஞ் சொல்லுகிறார்.

Koviloor Digital Library



[சு-ம்.] பிரத்தியக்ஷமாய்த் தனக்கெதிரே தோணப்பட்டு விளங்குகிற வாபாசப் பிரத்தியக்ஷமான விந்த ஜகத்தானது தன்னநுபவப் பிரத்தியக்ஷமான கூடஸ்தாத்மாவே. எதினுலென்ருல்? இவ்வளவும் ஆத்மகாரியமானபடியினுலேயுங் காரணநிஷ்டமான சத்தையைத்தவிர காரியங்களுக்குப் பிற த்தக்கா வொரு சத்தையில்லாதபடியினுலெயுங் கடகுட்டிய குதாலாதிகள் மண்ணைத்தவிர வில்லாததுபோலக் கூடஸ் தாத்மாவைக்காட்டிலு மணுவாகிலும் வேறுபட்டதாக வில்லை. (சஙஅ)

(அ-கை.) நிச்சங்கமான வவத்தையே ஜீவன்முக்தியெ ன்று சொல்லுகிருர்.

[சு-ம்.] வித்துவானுலே முன்சொல்லப்பட்ட ஸ்தூலசூக்ஷும காரணோபாதிகளென்ன, சத்துவாதிகுணங்களென்ன, இவைகள்முதலானதுகளைத் தன்னுவ தியாதொன்றுண்டோ வதுவே ஜீவன்முக்தி யந்த ஜீவன்முக்தியை யடைந்தவன் றதேகசித்தனுய்ச் சச்சிதானந்தசொருபமாயிருக்கிற பிரமசொருபமாகப் பிரமரகீடநியாயம்போலவானுன்.

(வி-ம்.) கீடமானது பிரமரசொருபத்தைத் தியானித் துத் தன்னுடைய தியானத்துக்கு விடயமாகிய மற்ருெரு பிரமரமானதுபோ விவ்டத்திலுங் கூடுமோவென்ருல்? ஜீவபரவைக்கியத்துக்குத் திருஷ்டாந்தமாக நிருபித்திருக்கிற விந்தப் பிரமரகீடநியாயத்தி லத்துவிதவாதிகளுக்குச் சாதியிலேமாத் திரமைக்கியமேதவிர வொருகாலத்திலேயும் வியத்தியிலே யைக்கியமேயில்லை. எதினுலென்ருல்? முன்சொன்ன ஜீவ பரவைக்கியவிஷயத்திற் பாகத்தியாகலக்ஷணையினுற் சோதித் தறியப்பட்டிருக்கிற ஜீவபாருடைய வநுகத ஜீவதம்சாதியி

Koviloor Digital Library



லேமாத்திர மைக்கியமேதவிர சர்வக்ஞத்வ கிஞ்சிக்ஞத்வாதி யுபாதிகாரியங்களாகிற ஜீவபர நாமரூபத்தி லக்கியமில்லை. பிரமரத்துவசாதியை யுடைத்தாயிருக்கிற பிரமரகிருமியைத் தியானித்துப் பிரமரத்துவசாதியை யுடைத்தானதாக வாகிற தேயன்றியிற் பிரமரசரீராந்தற்கதமான ஜீவசைதன்னியாம்ச த்தைதையு முடைத்தானதாக வநுபவிக்கிறதேயில்லை. (சமகூ)

(அ-கை.) ஆத்மாவானவ ரானந்தமாய்த்தானே விளங்கு கிருரென்று சொல்லுகிருர்.

[சு-ம்.] அக்ஞானமாகிற சமுத்திரத்தை வேதாந்தக்ஞா னமாகிற தெப்பத்தினுலேகடந்து ராகத்துவேஷாதிகளாகிற ராட்சதாளை யாத்மா வசங்கனென்கிற விசேடக்ஞானமாகிற கட்கத்தினுலேவெட்டிச் சமதமாதி குணங்களோடே கூடி னவராயும், பூருவஞ்சொன்ன ராஜயோகசமாதி நிஷ்டாசம்ப ன்னராயும், சதாகாலமுமாத்மாவினிடத்திலே ரமித்துக்கொ ண்டு மிருக்கிற வாத்மராமனுகிய மஹாத்மாவானவர் விளங்கு கிருர்.

(வி-ம்.) உபாசகாளாகிய சகுணப்பிரம நிஷ்டாளுக் கிப் போது சொன்ன சப்தங்களினுலே யதார்த்தந் தோனப்படு மதெப்படியென்ருல்? இக்ஷுவாகு வம்ஸ உற்பன்னராயிரு க்கிற ஸ்ரீராமனுனவ ரக்ஞான சமுத்திரம்போலே யகாதமா யிருக்கிற லவணசமுத்திரத்தை ஞானமார்க்கம்போலே ரம ணியமாயிருக்கிற சேதுபந்தன மார்க்கத்தினுலே கடந்து ராகாதிபோன்ற ராவணுதிகளை யாத்மா வசங்கமென்னும் விக்ஞானம்போன்ற அஸ்திரங்களினுலே சங்கரித்துச் சமத மாதி குணம்போன்ற பரமசுகத்தைக் கொடுக்கிறவளாயிருக் கிற சீதையோடே கூடினவராயு மைத்திரியாதி வாசனைபோ ன்ற பரிசுத்தாளா யிருக்கிற விபூஷண சுக்கிரீவ வனுமார்

Koviloor Digital Library



முதலான பிறமுகாளாலே சூழப்பட்டவராயும் விசுத்த சத்து வகுணம்போ லத்தியந்தந் தவளநிறமாயிருக்கிற சுவேதச சத்திரத்தோடுங் கூடினவராய் ராஜயோக சமாதிபோன்ற புஷ்பக விமானத்தின்மே லதிவேகமா யேறிவந் திருதயாகாசம் போன்ற பேதிக்கப்படாததாயுந் தேஜோமயமாயு மிருக்கிற வயோத்தியா பட்டணத்தில் விளங்குகிறாரென்று தோணப்படு மிந்தச் சகுணப்பிரமவிடயமும் நிர்க்குணப் பிரமவிடயமாகவே சொல்லப்படு மக்ஞானத்துக்குச் சமுத்திரத்துவ முவமான மெப்படிக்கூடுமென்றால்? ஞானமாகிற தெப்பமன்றியிலே கடக்கப்படாத படியினாலேயும், பிராந்தி பரம்பரைகளாகிற அலைக்கூட்டங்களினாலே சார்வகாலமு முல்லோலகல்லோலமா யிருக்கிறபடியினாலேயும், மாதாபிதா புத்திராதிகளாயிருக்கிற மமதகங்கார மகரமஷாதி துஷ்டசெந்து கோடிகளினிறைந் தத்தியந்தம் பயங்கரமாயிருக்கிறபடியினாலேயும், விடயானந்தரசமாகிற உப்புத்தண்ணீரினாற் பூரணமானபடியினாலேயும், சமுத்திரத்துவங்கூடும். ராகாதிகளுக் கிராட்சத்துவ மெப்படியென்றால்? பிறர்தனம் பிறர்மனைவியை யபகரிக்கிறதினாலேயும், பராளுக் குபத்திரவாதி செய்கிறதினாலேயு மிராக்ஷதாளைக்காட்டிலு மிராகாதிகளுக் கதிகமானதா விராட்சத்துவங்கூடும். (௫௰)

(அ-ரை.) ஜீவன்முக்தனதிலக்ஷணத்தைச் சொல்லுகிறார்.

[க-ம்.] பூருவஞ் சொல்லப்பட்ட மஹாராஜ யோகியானவன் பாகியோற்பவங்களாயு மநித்தியங்களாயுமிருக்கிற விகபர விடயசுகங்களி லுண்டாயிருக்கிற வாசக்தியைத் தன்னுடைய நித்திய நிரஞ்சன நிரதிசயானந்த நிருவிஷேஷ சொருபமாயிருக்கிற வானந்தத்தைச் சந்துஷ்டனா யநுபவித்திருத்தலா னிஷ்ஷேஷமாய் விட்டிருப்ப னந்த வநுபவத்தைக் கடத்துக்குளிரு

Koviloor Digital Library



க்குந் தீபம்போலே தனக்குள்ளே தானநுபவிக்கிறதே யல்லாமற் பிறரா லறிந்துகொள்ளுகிறதற்கும், பிறரோடே சொல்லுகிறதற்கும், நானெனநுபவத்தைச் சொல்லுகிறேன் நீரும்முடைய வநுபவத்தைச் சொல்லுமென்கிற விதண்டாவாத முதலானதற்கு மிடமாகாது. (ருமக)

(அ-கை.) பூருவஞ் சொல்லிவந்த பிரகாரம் ஜீவன்முக்தாநுபவத்தோடுங் கூடியிருக்கிற மஹாத்மாவானவர் பிராரத்த கருமானுசாரமாகச் சஞ்சரித்துக்கொண் டிருந்தாலு மவருக்கொரு சம்பந்தமுமில்லையென்று சொல்லுகிறார்.

[கு-ம்.] பிரமநிஷ்டனானவன் ஜீவனுக் குபாதியாயிருக்கிற ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங்களிற் சாக்ஷிமாத்திரமாய்ப் பார்த்துக்கொண் டிருந்தாலு மச்சரீரங்களின் சுபாவமாகிய வுற்பத்தி சராமரணங்களென்ன, சுவர்க்க நரகங்களென்ன, பிரியமோதப் பிரமோதங்களென்ன, இவைகளாற் கடமடாதியுபாதிகளி லுள்ளும் வெளியும் வியாபித்திருக்கிற வாகாசமதனோடெப்படிச் சம்பந்த மற்றிருக்கிறதோ வப்படிச் சம்பந்தப்பட்டவனன் றீதன்றியு மனேகமதங்களைக் கண்டித் தனேகமதங்களைத் தாபிக்கச் சக்தியுள்ள சர்வக்ஞனு யிருந்தாலு கருமகாண்டத்தையு முபாசனகாண்டத்தையு நிஷ்சேஷமாய்த் தள்ளிப்போட்டு ஞானத்தினாலே முக்திசம்பாதித்துக் கொள்ளுகிறேனுமென்கிற தைரியசக்தியிருந்தாலும் லோகத்திலே ஞானவாசனையேயில்லாத மூடசிரோமணியானவ னெப்படிக் கருமோபாசனைகளைப் பண்ணிக்கொண்டு சமுசாரியாயே யிருப்பனோ; அப்படிப் பார்க்கிறபேர்களுக்குச் சமுசாரிபோலும் வியபகாரதிசையிற் பிரபஞ்சகாரியத்திற் கொஞ்சமும் விடாதவனாயு மந்தந்தக் கருமோபாசன பலன்களைப் பரமார்த்தத்தில் வாஞ்சியாதவனாயும் வாயுவானது விருக்ஷாதிகளை யசைத்தாலு

Koviloor Digital Library



மவைகளின் சம்பந்த மில்லாதிருத்தல்போ லிவனும் பிரா ரத்த கருமபோகங்களைப் புசிக்கிறபோது மாசக்தியன்றியிலே புசிப்பன். (௫௰௨)

(அ-கை.) பிராரத்த கருமமானது நசித்துத் தூலசூக்ஷ்ம சரீரோபாதிகளு நஷ்டமாய்ப் போனபிற்பாடு விதேக கைவல் லியத்தை யடைவனென்று சொல்லுகிறார்.

[சு-ம்.] முன்சொல்லப்பட்ட ராஜயோகியானவன் றூல சூக்ஷ்மசரீரத்துவய நாசத்தினாற் சர்வவியாபகராயிருக்கிற பரமாத்மாவினிடத்தி னி நா னது விதுவென்கிற விசேடமன் றியிற் ஜலத்திலே ஜலமு மாகாசத்தி லாகாசமும் பிரகாச த்திற் பிரகாசமு மெப்படி யொன்றுகுமோ வப்படிப் பரம வைக்கியத்தை யடைவன். (௫௰௩)

(அ-கை.) பிரமமானது சர்வாதிசய வஸ்துவானபடியினு லதை நாலு சுலோகத்தினுற் றெரிவிக்கிறார்.

[சு-ம்.] யாதொரு பரப்பிரம சாக்ஷாத்கார ரூபமாயிருக் கிற வாத்மலாபத்தைக்காட்டிலு மன்னியமாயிருக்கிற வனுத் மலாபங்களெல்லாங் கற்பிதங்களாதலால் வேறில்லையோ; யா தொரு நிருவிகற்ப சமாதியிலுண்டாயிருக்கிற நிர்விடய சுகத் தைக்காட்டிலு மனுத்மவிடய சுகங்களெல்லாங் கற்பிதங்க ளாகையாலு மாத்மசுகாந்தர்ப்பூத மாகையாலு மன்னியமாயி ருக்கிற சுகமில்லையோ; யாதொரு பரப்பிரம சாக்ஷாத்கார வறிவைக்காட்டிலு மனுத்மவிடய க்ஞானங்களெல்லா மிரச்சு சர்ப்பக்ஞானம்போற் பிராந்தி கற்பிதமானதாலும் பரமபுரு ஷார்த்தத்துக்குச் சாதனங்களன்றியிலே போனாலு மந்த வனு த்மவிடயக்ஞானங்க ளெல்லா மாத்மவிடயக்ஞானத்தி லந்தர் ப்பூதமானதாலு மன்னியமாயிருக்கிற வறிவானதில்லையோ;

Koviloor Digital Library



அதானது பரப்பிரமமென்று விவேகியானவன் றிடமாயறி வன். (ருமஎ)

(அ-டை.) இதுவுமது.

[சு-ம்.] பார்க்கத்தக்கதாயிருக்கிற யாதொன்றைப்பார்த் தாற் சகலவேத புராண விதிகாசாகம பாரதமுதலான சகல சாஸ்திரங்களுக்கு மந்தந்தச் சாஸ்திரங்களிற் சொல்லப்படு கிற சரிதை கிரியை யோக ஞானங்களுக்கு மிதுவே யர்த்த மானபடியினு லிந்தவர்த்தத்தை விசாரித்தபிற்பாடு மற்றொரு சாஸ்திரங்களையும் பார்க்கவேண்டாதபடியாற் பார்க்கத்தக்க விடயமானதில்லையோ; அப்படியே ரசகுளிகையினுற் புடம் வைத்த லோகமான தெப்படித் தங்கமாகுமோ வப்படிப்போ னிருவிகற்பசமாதி புடபரிபாகத்தினு லுண்டாகிய மஹாக்கி னிச்சுவாலையினுல் ஜன்மகருமங்களுக்குக் காரணமான வஞ் ஞவித்தையா வாசனு பீசமானது வறுபட்டுச் சாம்பலாய்ப் போனபடியினுல் ஜீவனுனவன் மறுஜன்மமில்லாம லியா தொரு வஸ்துவாவானே வப்படியே யறியத்தக்கதாயிருக்கிற யாதொன்றை யறிந்தா லறியத்தக்கதாயிருக்கிற விடயங்க ளனேகமிருந்தாலு மவைகளெல்லாம் பரமார்த்தத்திற் றள்ளத் தக்கதுகளானபடியினுலே யவைக ளவிவேகியான மஹாபுரு ஷனு லறியத்தக்க வம்சங்களே யல்லாததா லன்னியமாயிருக் கிற ஞேயமானதில்லையோ; அதானது பரப்பிரமமென்று விவேகியானவன் றிடமாயறிவன். (ருமஅ)

(அ-டை.) இதுவுமது.

[சு-ம்.] கீழ்மேனடு முதலான சகல விடயங்களிலு மியா தொன்று வியாபித்திருக்கின்ற பூரணமோ; யாதொன்றபரிச் சின்னமாகிய வனந்தமோ; யாதொன்றுனது காலத்திரயா பாத்தியமாயு ஞானசொரூபமாயும் பரமப்பிரீதி விடயமாயு

Koviloor Digital Library



யிருக்கின்ற சச்சிதானந்தமோ; யாதொன்றான தேகமாகிய வ
த்துவிதமோ; யாதொன்றானது காலத்திரயத்திலேயு நாசமில்
லாத நித்தியமோ; அதாவது பரப்பிரம சொரூபமென்று
விவேகியானவன் றிட நிச்சயமாயறிவன்.

(வி-ம்.) அநார்த சடதுக்கங்களைத் தள்ளு நிமித்தஞ் சத்
துச் சித்தானந்தமென்று மூன்றாய் வியவகரிக்கப் பட்டாலும்
லோகிதோஷ்ணப் பிரகாசங்கள்போ லொன்றென்று சொல்
லப்படும். (ருஎசு)

(அ-கை.) இதுவுமது.

[சு-ம்.] அத்துவிதமாகிய வேகமாயு மபரிச்சின்ன சுகமா
கியு மகண்டானந்தமாயு மிருக்கிற யாதொன்றான துபநிடத
வாக்கியமான வதத்துக்களைத் தள்ளுகிற வதத்துவா விர்த்தியி
னாலே நன்றா யூகித்தறியப்படுமோ; அதானது பரப்பிரமமெ
ன்று மதேதானென்றும் மேதாவியாயிருக்கிற மஹாபுருஷ
னானவன் திடமாய்ப் பிரித்தறிவன். (ருஎஎ)

(அ-கை.) பிரமாதிகளுடைய விடய சுகங்களு நிரதிசய
சுகமென்று சாஸ்திரங்களிற் சொல்லப்படுகின்றதேயென்று
சங்கித்துக்கொண் டவைகளெல்லாம் லோகத்திலே கொஞ்சந்
தனதானிய சம்பன்னனாயிருக்கிற வொரு கிரகஸ்தனைப்பார
த்து நீ மகாராஜனென்று சொல்லுகிறதுபோல வுபசாரவாக்
கியமானதாற் பிரமாதிகளுடைய விடயசுகங்க ளொருக்காலும்
நிரதிசய சுகமேயன்று சாதிசய சுகமென்றே சொல்லுகிறார்.

[சு-ம்.] பிரமாதி தேவதைகளானபேர்க ளகண்டமாயிரு
க்கிற வானந்தத்தைத்தானே சொரூபமாக வுடைத்தாயிருக்கிற
பரமாத்மாவினுடைய வானந்தசமுத்திரத்தின் றுவியைத் தை
த்திரியோபநிடதத்திற் கூறியபடி பதினொருவகையாகிய தார்
தன்மியத்தோடு மடைந்தவர்களா யிருக்கிறார்கள்.

Koviloor Digital Library



(இ-ம்.) ஆத்மானந்த லவலேச மாதலாற் பிரமாதிகளு டைய வானந்தம் நிரதிசயானந்தமன்று சாதிசயானந்தமே ஆத்மாவோவென்றால்? பரமப்பிரீதிக்கு விடயமாய் விளங் குகிறார். (ருமஅ)

(அ-கை.) ஆத்மா பரமப்பிரீதி விடயமாய் விளங்குகிறாரெ ன்று சொல்லப்பட்டதே வது வயுக்தமென்றே தோணுகிற தேனென்றா லாத்மா தேகாதிப்பிரபஞ்சத்தைப் பரமப்பிரீதி யோடேகூட வநுபவிக்கிறபடியா லென் றாட்சேபித்துக் கொண் டந்தத் தேகாதிகளிளெல்லா மாத்மாவானவ ருள் ளும் வெளியிலு மேகரூபியாய் நிறைந்திருக்கிறபடியினா லங் தந்த வஸ்துக்களி லுண்டாகிற பிரமையு மாத்ம பிரமையைத் தவிர வேறில்லாதபடியினாலே பரமப்பிரியத்துக்கிடமா யாத் மாவே விளங்குகிறாரென்று முன்சொன்னதே சரியென்று சொல்லுகிறார்.

[சு-ம்.] தேகாதிப் பிரபஞ்ச சொரூபமான வஸ்துவான தாத்மசைதன்னியத்தோடே கூடினதினா லேதாச்சுதெனறாற் றேகாதி யகிலவஸ்துவுந் தனக்கதிஷ்டானமாயுந் தனக்கந்தர்ப் பகிர் வியாபகமாயுமிருக்கிற வாத்மசைதன்னியத்தோடே சே ர்ந்து விளங்குகிறதா லவைகளிலெல்லா மாத்மசம்பந்த மிருக் கிறதைத்தொட் டவைகளிலே யாத்மாவுக்கு பிரமையேதவி ரப் பரமார்த்தமா யாத்மாவைவிட வொருவஸ்துவுமில்லை யவ ருக் கவைகளிடத்தி லொருபிரமைக்கு மிடமில்லை யப்படியே லோக சம்பந்தமான வியவகாரமானது சிதாத்மாவோடேகூ டினதினா லேதாச்சுதென்றாற் சித்ரூபியான வாத்மசம்பந்த மன்றியிலொரு வியவகாரமுங் காணப்படாத படியினாலேயு மெல்லாவியவகாரத்திலுஞ் சிதாத்ம சம்பந்தமிருக்கிறபடியினா லேயும் வியவகாரங்களிலே பிரமையேதவிர பரமார்த்தமா

Koviloor Digital Library



யாத்மாவைவிட வொருவியவகாரமுமில்லை யவருக் கவைகளி டத்தி லொருபிரமைக்கு மிடமில்லை யாகையாற் பரப்பிரமமா னது சிறிதிடத்தில் வியாபித்துச் சிறிதிடத்தில் வியாபியாமற் போகாமல் ஆகாசம்போற் சகலத்திலுமுள்ளும் வெளியும் வியாபித்திருத்தலாற் சகலமான தேகாதிப் பிரபஞ்சங்களி லேயு மந்தந்தவியவகாரங்களிலேயு முண்டாயிருக்கிற பிர மையெல்லா மந்தந்த வஸ்துவில் வியாபகமாயு மந்தந்த விய வகாரங்களுக் கதிஷ்டானமாயுஞ் சாக்ஷிமாத்திரமாயு மிருக்கிற சிதாத்மாவினுடைய சம்பந்தத்தைத்தொட்டுத் தோணுகிறபடி டயினாலேயுங் காலத்திரயத்திலேயு மாத்மாவே பரமப்பிரீதி விடயராய் விளக்குகிரு ரானபடியா லகிலப்பிரபஞ்சத்திலேயு மாத்மா சர்வவியாபகமாய்ப் பாலிலே நெய்யானதுபோ லிருத் தலாற் சகலவஸ்துவு மாத்மாவோடே கூடினது சகல வியா பாரமுமாத்மசாக்ஷியோடே கூடினது. (௫௰௬)

(அ-கை.) ஆத்மாவானவ ரெந்தப்பிரகாரமாய்ச் சர்வத் தையும் வியாபித்திருக்கிருரென்று சங்கித்துக்கொண் டந்தப் பிரகாரத்தை யின்னபடியென்று சொல்லப்படாத படியினு லணுஅத்தூலமென்று சுருதிகளிலே சொல்லியிருக்கிற பிரகாரமாய்ச் சமாதானஞ்சொல்லுகிருர்.

[சு-ம்.] யாதொன்ருனது வணுபரிமாணத்தை யுடைத் தாகாதவணுவோ; யாதொன்ருனது ஸ்தூலபரிமாணத்தை யுடைத்தாகாதவதூலமோ; யாதொன்ருனது குறிகினபரி மாணத்தை யுடைத்தாகாததோ; யாதொன்ருனது நீண்ட பரிமாணத்தை யுடைத்தாகாததோ; யாதொன்ருனது ஜன்ம விகாரத்தை யுடைத்தாகாத அசமோ; யாதொன்ருனது மரணவிகாரத்தை யுடைத்தாகாத வவ்வியமோ; யாதொன் ருனது ருபங்களென்ன, சுகுண தற்குணங்களென்ன, சுக்கி

Koviloor Digital Library



லாதி வர்ணங்களென்ன, ஜீவீசுராதி நாமங்களென்ன, இவைகளி லொன்றையு முடைத்தாகாததோ; அதானது பரப்பிரமமென்று மஹாயோகியானவன் றிட நிச்சயமாயறிவன். (௬௰)

(அ-கை.) இத்தியாதி லக்ஷணத்தோடுங்கூடிய பிரமக் ஞானத்தை வெளியாய்த் தெரிவிக்கிற நிமித்த மிந்த வர்த்தத்தைத்தானே மூன்று சுலோகத்தினாற் சொல்லுகிறார்.

[சு-ம்.] ஆதித்தியன் சந்திரன் நட்சேத்திரம் மாணிக்கந் தீபாதிகளான பிரகாச வஸ்துக்கள் யாதொரு சிதாத்மாவினுடைய பிரகாசத்தினாலே யிது சூரிய னிது சந்திரன் யிது நட்சேத்திர மிது மாணிக்க மிது தீபமென்று தனித்தனியா யறியப்பட்டு விளங்குகிறதோ; தன்னாலே பிரகாசிப்பிக்கிறதற்கு யோக்கியங்களாயிருக்கிற சூரியாதிகளினா லிவர் தானாத்மாவென்று விளக்கிவைக்கப் படவில்லையோ; இப்படிப் பாகியப் பிரபஞ்சங்களா யிருக்கிற சூரியாதிப் பிரகாச வஸ்துக்களுக்கும் பிரகாசமான நேத்திரேந்திரியமென்ன, அதிலும் பிரகாசமான வந்தரிந்திரியமான மனதென்ன, விதுமுதலான சகலமான பாகியாந்தரப் பிரகாச வஸ்துவு மியாதொரு சிதாத்மப் பிரகாசத்தினாலே விளங்குகிறதோ; அதானது பரப்பிரமமென்று மேதாவியான மஹாபுருஷ னிச்சயித்தறிவன். (௬௰௧)

(அ-கை.) பிரமமானது சகலத்தையும் பிரகாசிப்பித்துக் கொண்டு தானும் பிரகாசமா யெப்படி யிருக்கிறதென்று சங்கித் ததற்குத் திருஷ்டாந்தத்தோடுஞ் சமாதானஞ் சொல்லுகிறார்.

[சு-ம்.] அக்கினியான தயப்பிண்டத்தி னுள்ளும் வெளியுமேகரூபமாய் வியாபித் தந்த வயப்பிண்டத்தையும் பிரகாசிப்

Koviloor Digital Library



பித்துக்கொண்டு தானு மெப்படி பிரகாசிக்கிறதோ; அப்படிப் பிரமமானது சர்வஜகத்தி னுள்ளும் வெளியு மேகரூபியாய் வியாபித்துக்கொண் டவைகளைப் பிரகாசிப்பித்துத் தானு மெப்போதும் பிரகாசிக்கிறது. (௬௰௨)

(அ-கை.) பிரமந்தானே விளங்குகிறதென்று மதைத்தவிர வற்பமுமில்லையென்றுஞ்சொல்லுகிறார்.

[சு-ம்.] பரமார்த்தமாய் நன்றாய் விசாரிக்கிறபோது சகலமும் பிரமசொரூப மானபோதினு மெப்போ ஜகத்தானது வேறாய்த்தோற்றுமோ; அப்போ பிரமமானது பிரபஞ்சத்துக்கு வேறுபட்டதாக விளங்குகிற தெப்போ பிரமமானது சாக்ஷாத்கரிக்கப்படுமோ; அப்போ பிரமத்தைக்காட்டிலு மணுமாத்திரமாகிலும் வேறுபட்டதாகவில்லை. அப்படியிருக்கப் பிரமக்ஞானிகளுக்கு மொருவேளை யந்தக்கரண விர்த்தி வெளிப்படும்போது பிரமத்தைக்காட்டிலும் வேறுபட்டதாக ஜகத்தானது விளங்கினாலும் பிராந்திசென்னிய மான்மருபஞ்சிகைபோலப் பொய்யானதாற் சதாகாலமும் பிரமமான தேகரூபமாய்த்தானே விளங்குகிறது. (௬௰௩)

(அ-கை.) இதுவுமது.

யாதொரு ரூபவிடயமானது சட்சிந்திரியத்துவாரா வறியப்படுகிறதோ; யாதொரு சப்தவிடயமானது சுரேத்திரேந்திரியத்துவாராக கேட்கப்படுகிறதோ; இந்தப்பிரகாரஞ் சகலபாகியேந்திரியத்துவாரா சகலமு மறியப்படுகிறதோ; அப்படியே யாதொரு மனோராச்சியமானது மனோத்துவாராப் பாவிக்கப்படுகிறதோ; அந்தச் சகலமான வாந்தரப்பகிரிந்திரியமான சகமு மதைச்சேர்ந்த பாகியாந்தர விடயப்பிரபஞ்சங்களுங் கடந்த சைதன்னியத்தைக்காட்டிலும் வேறாகவிரு

Koviloor Digital Library



க்கமாட்டா தந்தப் பிரத்தியகபின்ன பிரமசைதன்னியமே தத்துவக்ஞானத்தினுற் சச்சிதானந்தமாயு மேகமாயும் விளங்குகிறது. (கூ௰௪)

(அ-கை.) ஆத்மாவைக் கண்ணினுலே காணக்கூடாதென்றும், காதினுலே கேட்கக்கூடாதென்றும், வாக்கினுலே வசனிக்கக்கூடாதென்றும், மனதினுலே நினைக்கக்கூடாதென்றும், சுருதிகள் சொல்லுகிறபடியினு லப்படிப்பட்ட வஸ்துவை யெந்தத் திருஷ்டியுள்ளவன் பார்ப்பன் யெந்தத் திருஷ்டியுள்ளவன் பார்க்கமாட்டானென்று சங்கித்துக்கொண்டதற்குச் சமாதானஞ் சொல்லுகிறுர்.

[சு-ம்.] ஞானதிருஷ்டியை யுடைத்தானவன் சர்வவியாபகமாயுஞ் சச்சிதானந்த சொரூபியாயுமிருக்கிற பரப்பிரமத்தைச் சாக்ஷாத்கரித் தறிகிறவ னெதிரேவிளங்கிக்கொண்டிருக்கிற சூரியனைப் பிறவிக்குருட னறியாததுபோ லக்ஞானமென்கிற படலரோகத்தினுலே குருடாயிருக்கிற கண்ணையுடைத்தான சடனுனவன் சர்வத்திர பரிபூரண சச்சிதானந்தப் பிரமத்தைப் பார்க்கமாட்டா னனேகமாவிர்த்தி போதித்தாலு மவன் கண்டுபிடிக்கமாட்டான். (கூ௰ரு)

(அ-கை.) இப்படி முன் சொல்லிக்கொண்டுவந்தபிரகாரமநுபவ சம்பன்னனு யிருக்கிறவனுக் கப்பியாசத்துக்குக் குறைவுவருகிறபோ தனுத்மவாசனு வேகத்தினுலே முன் சிரவணுதிகளினுற் றலைவணங்கின வக்ஞானமானது கொஞ்சந் தலையெடுக்கும் மறுபடி யொருநாளுந் தலையெடுக்க வொட்டாமற் றியானம்பண்ணுகிற நிமித்தஞ் சதா சிரவணுதிகளே பண்ணவேண்டுமென்று சொல்லுகிறுர்.

[சு-ம்.] பூருவஞ் சொன்னபிரகாரம் நித்திய முக்த சுத்த பரிபூரணுனந்த சொரூபியான பரப்பிரம வஸ்துவைவிஷயீ

Koviloor Digital Library



கரித்துத் தாற்பரியத்தோடே பண்ணப்பட்ட சிரவணுதிகளினுலே பிரகாசிக்கிறவனுய்க் காய்ச்சி யுருக்கிவிடுகிறபோது சகல துர்வர்ணமும் நீங்கி நிருமலமாயிருக்கிற சுவர்ணம்போலே யகண்டாகார விர்த்திக்ஞானமாகிற வக்கினிப்புடத்திஞலே நன்ருய்ப் பதமறிந்து காய்ச்சி யுருக்கிவிடப்பட்டுச் சத்துவ ரசோ தமத்தோடுங் கூடிய ஜீவத்துவமாகிய மலம் நீங்கிய பிரத்தியகாத்மாவானவர் தான்ருனே விளங்குகிருர்.()

(அ-கை.) இப்படிச் சோதித்தறியப்பட்டிருக்கிற ஜீவாத்மாவானவர்தானே பரமாத்மாவாகப்பாவித்துப் பாகியாகாசத்திற் பாகிய தமசையபகரிக்கிற சூரியன்போலே யிருதயாத்சாத்திலே தமோரூபமான வக்ஞானத்தை யபகரித்துக்கொண்டு தானே சர்வசொரூபியாய் விளங்குகிருரென்று சொல்லுகிருர்.

[சூ-ம்.] இருதயாகாசத்திலே யுதித்த விக்ஞானமாகிற பானுவானவர் அனுதி யவித்தையா ரூபமான காடாந்தகாரத்தை யபகரிக்கிறவராயுஞ் சர்வபரிபூரணராயுஞ சர்வாதிஷ்டானமான சர்வதாரியாயும் விளங்குகிருர். ஆகையினுலே பாகியாந்தர சகல பிரபஞ்சமும் விளங்குகிற திப்படி யொருவாத்துமசம்பந்தப் பிரகாசமன்றியிலேபோனுற் பிரபஞ்சத்துக்குச் சுதாவாய்ப் பிரகாசமில்லை. (சுஎ)

(அ-கை.) முன் சொல்லப்பட்ட சிரவணுதி பரிபாகத்திஞலே பிரமாபரோக்ஷ விக்ஞானியா யநுபவிக்கப் போகிறவனுக் கந்தப் பிரமாபரோக்ஷ விக்ஞானத்துக்குப் பிரதிபந்தங்களாயிருக்கிற சகல பாவங்களையும் பரிகரிக்கிற நிமித்தங் கொஞ்சநாட் பிரயாகையாதி தீர்த்தயாத்திரை செய்யவேண்டி வருமோவென்று சங்கித்துக்கொண் டதற்குச் சமாதானஞ் சொல்லுகிருர்.

Koviloor Digital Library



ங்களென்ன, காசியாதி
ணிய காலங்களென்ன,
ற் சர்வவியாபகமாயுங் கு
ளிர்ச்சி தாயுங் காலத்திரயத்திலே
யுஞ் சுகப்பிரதமாயு நிரஞ்சன யு மிருக்கிற கூடஸ்தாத்மா
வாகிய கங்கா தீர்த்தத்தை யாதொருத்த னடைகிருனே;
அவன் நிர்வியாபார னவன் சர்வக்ஞன் அவன் சர்வபரிபூரண
னவனே யமிர்தசொரூபி.

(இ-ம்.) திக்குத் தேசகாலாதிகளாலே பரிச்சின்னங்களா
யும், சீதாதி யுபத்திரவ காரிகளாயும், அநித்திய சுகப்பிரதங்க
ளாயும், அக்ஞான கற்பிதங்களாயு மிருக்கிற பிரயாகை யாதி
தீர்த்தங்களைப்போ யடைகிறதே மஹாப்பிரயாச மப்படி
மஹாப்பிரயாசப் பட்டுக்கொண்டுபோ யடைந்தாலு மவைக
ளொன்றும் பரமபுருஷார்த்தத்தைக் கொடுக்கச் சக்தியில்லா
தது. ஆனபடியினுலே எங்குநிறைந்துகொண் டொருபிரயா
சத்துக்கு மிடமில்லாமலடையத்தக்கதாயு நிமிடத்திலே சக
ல கல்மசங்களையும் பரிகரிக்கிறதாயு மிருக்கிற பரமாத்மாவா
கிய தீர்த்தத்திலேஸ்நானம் பண்ணினவனுக்கு மற்ருெரு
கற்பிதமான தீர்த்தயாத்திரைகளுஞ் செய்யவேண்டியதில்லை
சித்தம். (சுஙஅ)

## ஆத்மபோத மகாவசனம்

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

சர்வஞ்சின்மயம்.

Koviloor Digital Library

## குருபரட

பரமாக வொளிர்சச
பங்கயன்
பராசமா முனிம ... மகளட
பாதர்கோவிந்தயோகி
யருளுருவ மாஞ்சங்க ராசாரி யாமிறைக
ளமர்பத்ம பாதருயரத்
தாமலகர் தோடகா சிரியர்வார்த் திகர்வித்
தியாரண்ய ராகுமுரவோ
ரிருளுருவ மற்றவவர் மரபதனில் வந்தசுப்
பிரமணிய தேவனயின
வீசனழ கப்பவா ரியன்வீர பத்திரகுரு
வின்பமுத் தையவடிக
ளருளுருவ மாமுகத் தையனன் மைகளிலாத்
தியனேன் றனையுமாண்ட
சிர்முத்து ராமலிங்க வருணசல சிதம்பர
தேசியர்க டிகழ்பதமிறைஞ்சுவோமே.

---

## குருஸ்துதி.

பாச மனைத்தையுந் தனித்தனிப் பரிந்திட நீக்கி
நேச மாகிய வறிவுரு நீயெனக் காட்டிப்
பேசு மேழ்வகைப் பிறப்புனக் கிலையெனப் பேசித்
தூசு நீக்கிய சயஞ்சிதா காசனைத் தொழுவாம்.

---

45704